# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 3. இதழ் 12. | புதன்கிழமை 20—12—44 | விலை 2 அணா

## கிராமரேஷனிங் கைவிடப்பட்டதா?

தமிழ்நாட்டில் கோவை, சேலம், திருச்சி, ராமநாதபுரம், திருநெல்வேலி, ஆகிய ஜில்லாக்களின் உணவு நிலைமை நாளுக்கு நாள் மோசமாய்க்கொண்டே வருகிறது. கிராம வட்டாரங்களில் உணவு தானியம் கிடைப்பது குதிரைக்கொம்பாய்விட்டது.

இந்த நிலைமையில், இந்த ஜில்லாக்களில் கிராமங்களிலும் பங்கீடுமுறை அமுலுக்கு கொண்டுவரப் போவதாக சென்னை சர்க்கார் அறிவித்ததை நாம் வரவேற்றோம். இந்த ஜில்லாக்களிலிருந்த மக்களும் இதை வரவேற்று, ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.

ஆனால், உணவு பங்கீடுமுறை அமுலுக்கு வரவேண்டுமானால், கொள்முதல் திட்டம் உருப்படியாக இருந்தால்தான் முடியும் என்பது தெளிவு. இதனால்தான் இந்த ஜில்லாக்களில் விளையும் புஞ்சை தானியங்களை வாங்குவதற்காக கொள்முதல் திட்டத்தை 17-10-44 அன்று சர்க்கார் பிரசுரித்ததை நாம் வரவேற்றோம்.

ஆனால், சென்ற வாரத்தில் வெளியான கெஜட்டில் இந்தக் கொள்முதல் திட்டத்தை ரத்துசெய்துவிட்டதாக சர்க்கார் பிரசுரித்திருக்கின்றனர். இதற்கு எத்தகைய காரணமும் சர்க்கார் காட்டவில்லை.

இதைப் பார்த்தவுடன் நாம் திடுக்கிட்டோம். ஏனெனில் இந்த திட்டத்தைக் கைவிட்டபிறகு, கிராமாந்திர ரேஷனிங் முறையே கைவிடப்பட்டுவிட்டதோ என்று திகிலடைந்துள்ளோம். சர்க்கார், உடனே, நிலைமையை விளக்கி, தங்களுடைய உத்தேசம் என்னவென்பதை விளக்கி, ஒரு அறிக்கையை விடவேண்டும்.

கொள்முதல் திட்டத்தை நிறைவேற்றாவிடில், பங்கீட்டிற்கே ஆபத்து. அதுவும், மழையினால் புஞ்சை வெள்ளாமைக்கே சேதம் விளைந்திருக்கக்கூடிய இன்று, இந்த ஜில்லாக்களில் இனி கள்ள மார்க்கட்டு இன்னும் கோரமாகத் தலைவிரித்தாடும் என்பதில் சந்தேகமே வேண்டாம்.

சர்க்கார் ஏன் இந்த திட்டத்தைக் கைவிட்டது? இந்த ஜில்லாக்களிலுள்ள சில சேமிப்பாளர்களின் கூச்சல் இதற்குக் காரணமாயிருக்கலாம். அவர்கள் கிளப்பிவிடும் வதந்திகளினாலும், கட்டிவிடும் கதைகளினாலும், இந்தப் பிரதேசத்திலுள்ள சாதாரண விவசாயிகளும்கூட நிலைமையை புரிந்துகொள்ளாமல், கொள்முதல் திட்டத்தை எதிர்க்கலாம் என்ற பீதியும் இதற்கு காரணமாயிருக்கலாம்.

ஆனால் இந்தப் பிரதேசத்திலுள்ள தேசபக்தர்கள் நாம் சும்மா இருப்போமாயின், எந்த முற்போக்குத் திட்டத்தையும், சுயவர் கூட்டம் முறியடிக்கத்துணியும் என்பதை உடனடியாக உணர வேண்டும்.

கொள்முதல் திட்டத்தையும், உணவுப் பங்கீட்டையும் அமுலுக்குக் கொண்டுவருமாறு அவர்கள் கிளர்ச்சி செய்யவேண்டும். விவசாயி மக்களிடம், இந்த திட்டத்தின் அவசியத்தை உணர்த்திப் பிரசாரம் செய்ய முன்வரவேண்டும். அவர்களுடைய தேசபக்தியையும், சகோதர வாஞ்சையையும், தட்டி எழுப்ப முன்வரவேண்டும். அதுதான், கொள்முதல் திட்டமும், பங்கீடு திட்டமும், வெற்றி பெறுவதற்கான உத்திரவாதம். கள்ளமார்க்கட்டை ஒழிப்பதற்கும் அதுவே உத்திரவாதம்.

சென்றவாரத்தில் கோவையில் கூடிய காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில், உணவுக் கமிட்டிகளை ஒவ்வொரு பிர்க்காவிலும் நிறுவி, வேலை செய்வது என்று தீர்மானிக்கப்பட்டது வரவேற்கத்தக்கது. இந்த மகத்தான காரியத்தில், எல்லோரையும், சகல கட்சியினரையும், சேர்த்துக்கொள்வது என்று அவர்கள் செய்த முடிவும் போற்றத்தக்கதே.

இந்தத் தீர்மானத்தை அமுல் நடத்துவதில் இனி ஒரு க்ஷணமும் காலதாமதம் செய்யக்கூடாது. ஏனைய ஜில்லாக்களிலும் உள்ள தேசபக்தர்கள், உடனடியாக இந்த இயக்கத்தில் ஈடுபட நடவடிக்கைகள் எடுப்பார்களாக.

## விவசாயிகளிடையே பிளவு வேண்டாம்!

நிர்மாண திட்டத்தை நிறைவேற்றுவதில் காங்கிரஸ்காரர்கள் விவசாயிகளிடையில் பணியாற்றுவது ஒரு முக்கியமான பகுதி. இந்தியப் பொருளாதாரத்தின் முதுகெலும்பு விவசாயம். 7 லக்ஷம் கிராமங்களில் நாட்டின் ஜனத்தொகையில் முக்கால் பங்குக்குமேல் வாழ்ந்து வருகின்றனர்.

இந்தக் கோடிக்கணக்கான மக்களிடையே பணியாற்றி, அவர்களுக்கு உதவியளித்து, ஸ்தாபன அமைப்பைப் பலப்படுத்தி புதிய சக்தியை உருவாக்க முடியும். விவசாயிகள் இதற்கென ஏற்படுத்திக்கொண்டுள்ள ஸ்தாபனம் அ. இ. கிஸான் சபை (அகில இந்திய விவசாயிகள் சங்கம்.)

இம்மாத ஆரம்பத்தில் கூடிய அச்சபையின் மத்திய கவுன்ஸில் அந்த ஸ்தாபனத்தின் திட்டத்தை விளக்கி தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றது. தங்களுடைய கஷ்டங்களை நிவர்த்தி செய்துகொண்டு, நாட்டு மக்களுக்கு உணவை அளிக்க உருப்படியான முயற்சி செய்துவருகின்றது; கொள்ளை லாபத்தை எதிர்த்து, விஷம்போல் ஏறியுள்ள விலைவாசியை எதிர்த்துப் போரிட விவசாயிகளைத் தூண்டுகிறது; பஞ்ச நிவாரணத்திலும், தொத்து நோய்களை எதிர்ப்பதிலும் மற்ற ஸ்தாபனங்களுடன் ஒத்துழைத்து பணியாற்றுகின்றது; நாட்டு மக்களுக்கு உணவளிக்க உணவுப்பெருக்கு இயக்கத்தை வளர்க்கிறது. கிராமவாசிகளுக்குத் தேவையான பொருள்களுக்குப் போராடுகிறது. நிலச்சுவான்தார்களின் சுரண்டல்களை எதிர்த்துப் போராடுகிறது.

இத்தகைய திட்டத்தையுடைய ஸ்தாபனத்தில் எல்லா கட்சிகளும் சேர்ந்து வேலை செய்யமுடியும். காந்திஜியின் நிர்மாணத் திட்டத்திலுள்ள முக்கிய அம்சங்களை பஞ்சநிவாரணம், கொள்ளை லாப எதிர்ப்பு முதலியவற்றை நிறைவேற்ற இந்த ஸ்தாபனத்தை மேலும் பலப்படுத்துவதே வழி.

இந்த வழியை விட்டுவிட்டு, அ. இ. கி. சபையின் கொள்கையையும் திட்டத்தையும் திரித்துக்கூறி வருகின்றார் ரங்கா. அது ஒரு கம்யூனிஸ்டு ஸ்தாபனம் என்று கூறி ஒரு போட்டி சங்கத்தை ஸ்தாபித்து வளர்க்கப் பார்க்கிறார்.

இப்படிச் செய்வது விவசாயிகளுக்குத் தீங்கிழைப்பதாகும். சோதனையான காலத்தில் பற்பல இன்னல்களிடையே வளர்த்த விவசாயிகள் ஸ்தாபனத்தை சீர்குலைக்க முயற்சிப்பதாகும். இந்த நாட்டு மக்களுக்கே பெருந் தீங்கிழைப்பதாகும் என்று மத்திய கவுன்ஸில் கூறியிருப்பதை, ஒவ்வொரு பொதுஜன ஊழியனும் ஆமோதிப்பான்.

[அடுத்த இதழில் மத்திய கிஸான் கவுன்ஸில் தீர்மானங்கள் பிரசுரிக்கப்படும்.]

அரியலூரில்

## காங்கிரஸ் சங்கக் கூட்டம்

## கம்யூனிஸ்டு எதிர்ப்புதான் நிர்மாண திட்டமா?

இரண்டரை வருஷங்களுக்குப் பிறகு தமிழ் நாட்டிலுள்ள காங்கிரஸ்வாதிகள், சென்ற ஞாயிற்றுக்கிழமைதினம் அரியலூரில் கூடினர். இன்றைக்கு நாடு இருக்கும் நிலைமையைப்பற்றி அவர்கள் உணராமலிருக்கமுடியாது. மகாநாட்டிற்குத் தலைமைவகித்த, ஸ்ரீ எஸ். கே. பாடீலே, தன்னுடைய தலைமையுரையில் அதை விவரித்துள்ளார்.

"கடுமையான அரசியல் நெருக்கடி நாட்டைவாட்டுகிறது. அரசியல் இந்தியா வழியிழந்து, சோர்வுற்று, நிலைகலங்கி நிற்கின்றது. அரசியல் வாழ்வில் மந்தம் ஏற்பட்டுள்ளது. முற்போக்கு சக்திகளும், செயலற்று கிடக்கின்றன! என்று ஆரம்பத்திலேயே ஸ்ரீ பாடீல் கூறினார்.

இந்த நிலையில் கூடிய தேசத்தின் பிரதான அரசியல் ஸ்தாபனத்தின் ஊழியர்களின் மகாநாட்டில் நாம் எதை எதிர்பார்ப்போம்? நிலைமை தீவிரமாகப் பரிசீலனை செய்யப்படும்; இந்த நெருக்கடியைத் தீர்ப்பதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்பவைகளையெல்லாம் தீர்க்கமாக விவாதித்து ஆலோசனைகள் நடக்கும் என்றல்லவா எதிர்பார்ப்போம்?

### அவசர தோரணை

ஆனால், மகாநாடு நடந்த தோரணையைப் பார்த்தால், ஆச்சரியத்தை விளைவிக்கும். ஒரே நாளில் 500 பேர்களுக்குமேல் கூடினார்கள். காலையில், வரவேற்புப் பிரசங்கம்; தலைவர் பிரேரணை; தலைவரின் தலைமைப் பிரசங்கம்.

இடை வேளையில் விஷயாலோசனைக் கமிட்டி; பிற்பகலில் சுமார் 3-மணி நேரத்திற்குள் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்படுதல்! மாலை 6-மணிக்கு வந்தனோபசாரத்துடன் மகாநாடு கலைதல்! இதுதான் தேசத்தின் நிலைமையை ஆராய்ந்து, காங்கிரஸ் வாதிகளுக்காக வேலைத் திட்டத்தை வகுக்கக்கூடிய மகா நாட்டின் விமரிசை!

ஸ்ரீ. எஸ். கே. பாடீலின் தலைமைப் பிரசங்கத்தில், புதிதாக எதையும் காணமுடியாது. காந்திஜி சமரசத்தை நாடினார்; வைஸ்ராய் நிராகரித்து விட்டார். ஜின்னாவைச் சந்தித்தார்; பலன் ஏற்படவில்லை. தேசத்தில் அநீதியான ஆட்சிமுறை இருந்து வருகிறது. என்பதெல்லாம் பழைய பல்லவிதான்.

ஆனால், "ஏன் நமது லட்சியம் கை கூடவில்லை, என்பதை யாரும் ஆராய்ந்தறிய முடியாது" என்று கூறிவிட்டார்.

சென்ற காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களைக்கொண்டு, அதன் படிப்பினைகளைக் கற்பதற்கு அவசியமானவைகளைக் கூடச் செய்ய முயற்சிக்க மறுத்தால் எப்படி சரியான திட்டம் போட முடியும்? மீண்டும், சென்ற காலத்தில் ஏற்பட்டதுமாதிரி ஏற்படாது என்பதற்கு என்ன உத்திரவாதம்?

### ஆத்ம சோதனை மட்டும் போருது

"ஒவ்வொருவரும், தன் உள்ளத்தைச் சோதித்துப் பார்த்துக்கொள்ளட்டும். இந்த இயக்கத்தில் நாம் பல தவறுகளை செய்திருக்கக்கூடும். காந்திஜியின் தலைமையை ஏற்று நடப்பவர்கள் நாம் ஆயினும், அவருடைய உயரிய தத்துவமாகிய அஹிம்சையிலிருந்து நழுவியுள்ளோம்" என்று கூறி, ஒவ்வொரு காங்கிரஸ்காரரையும் ஆத்மசோதனை செய்துகொள்ளச் சொல்லுகிறார். அவ்வளவுதான்! அந்த தனித்தனியாக நடத்தப்படும் ஆத்மசோதனையின் பலன்கள், பொதுவாக ஸ்தாபனத்திற்கு, கிடைக்க வேண்டிய அவசியத்தைக்கூட ஸ்ரீ பாடீல் உணர்ந்ததாகக் காணோம்.

### உண்மையை உணரவேண்டும்

ஆனால், ஒரு உண்மையை உணர்ந்தால்தான் இன்றைக்கு காங்கிரஸ் வாதிகள் உருப்படியான திட்டத்தை "இந்த இயக்கத்தில் வகுக்கமுடியும். ஒவ்வொருவரும் பல தவறுகள் செய்திருக்கக்கூடும்" என்று பாடீல் கூறுகிறாரில்லவா? அவைகளெல்லாவற்றையும் விட, தேசத்தில் நடந்தது, காந்திஜியினாலோ காரியக் கமிட்டியினாலோ நடத்தப்பட்ட இயக்கம் அல்ல. உண்மையில் அதிகாரவர்க்கம் செய்த ஒரு சூழ்ச்சி இது. காங்கிரஸிற்குள்ளேயே இருந்த ஒரு கட்சி, இது காங்கிரஸ்தான் ஆரம்பித்த இயக்கம் என்று பிரசாரம் செய்து வந்தது. இதில் பெருவாரியான காங்கிரஸ் வாதிகள் மயங்கிப்போயினர். அமெரியின் ரேடியோப் பிரசங்கத்தைக் கேட்டு, இந்த இயக்கம் காங்கிரஸினால்தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கக் கூடுமோ என்ற நம்பிக்கை ஊர்ஜிதமாயிற்று என்று பொறுப்பு வாய்ந்த காங்கிரஸ்வாதிகள் கூறவில்லையா? பெரும்பான்மையான தேச பக்தர்கள் அதிகார வர்க்கத்தின் சூழ்ச்சிக்கிரையானதுதான் அன்று இந்த "இயக்கமாக"ப் பரிணமித்தது. என்ற போதம் உண்மையில் பொதுவாகக் காங்கிரஸ் வாதிகளுக்கு ஏற்பட்டால்தான் சரியான திட்டங்களை தயாரிக்க முடியும்.

ஸ்ரீ.எஸ்.கே. பாடீலும் சரி, அரியலூரில் கூடியிருந்த காங்கிரஸ் வாதிகளில் பெருவாரியானவர்களும் சரி, இதைத்தான் சரிவர உணர மறுக்கின்றனர். ஆகவே, என்ன நிலைமை ஏற்படுகின்றது.

'இயக்கம்' தோற்றுவிட்டது. அதற்குக் காரணம் என்ன? நம்மோடுகூட இருந்த கம்யூனிஸ்டுகள்

பி. ராமமூர்த்தி

இயக்கத்தில் கலந்துகொள்ளவில்லை. இதற்குப் பரிகாரம் என்ன? கம்யூனிஸ்டுகளை வெறுக்கவேண்டும்! தேசத்தில் அவர்களுக்குச் செல்வாக்கென்பதே இல்லாமல் செய்துவிடக் கச்சைவாரிக் கட்டிக்கொள்வோம்!

இதற்கு, ஸ்தாபனச் சீரமைப்பு என்ற மருந்தை ஸ்ரீ பாடீல் கண்டுபிடித்திருக்கிறார். கம்யூனிஸ்டுகள் தொழிலாளர்கள், விவசாயிகள் மத்தியில் வேலைசெய்கிறார்கள். ஆகவே, நாமும் வேலைசெய்யவேண்டும். ஏன் தெரியுமா? "இவர்களுக்கு நாம் சேவைசெய்து, இவர்களை பலப்படுத்தினால், இவர்கள் நமக்கு உதவுவார்கள். தொழிலாளர், விவசாயிகளின் இயக்கம், தேசிய இயக்கத்தின் இன்றியமையாத, பகுதி என்ற உணர்ச்சியினாலல்ல. அவர்கள் வேறு! நாம் வேறு! பரஸ்பரம் உதவிக்காக! இதைப்போன்ற பக்க சந்தர்ப்பவாதம் வேறென்னவேண்டும்?

இந்த வெறுப்பையும், சந்தர்ப்ப வாதத்தையும் அடிப்படையாகக் கொண்டுதான் இன்று காங்கிரஸ் சங்கம் ஆரம்பிக்கப்படுகிறது. மகாநாட்டின் மற்ற நடவடிக்கைகளிலும் இதைக் கண்கூடாகப் பார்க்கிறோம்.

### பேச்சு சுதந்திரம் இல்லை

திண்டுக்கல் ஜனாப் அப்துல்சத்தாரை அறியாத காங்கிரஸ் ஊழியர் தமிழ்நாட்டில் யாரும் இருக்கமாட்டார்கள். சமீபத்தில்தான் சிறையிலிருந்து விடுதலையானார். ஆனால் அவர் மகாநாட்டில் வந்த ஒரு தீர்மானத்திற்கு கம்யூனிஸ்டு வெறுப்பை எடுத்துவிடும்படியான திருத்தத்தை பிரேரேபித்தபோது, கூச்சலும், கலாட்டாவும் செய்து, அவர்பேசக் கூட முடியாத நிலைமை ஏற்பட்டது. எந்த உண்மை காங்கிரஸ் ஊழியனும், இந்த நிலைமையைக்கண்டு வெட்கித் தலைகுனியாமலிருக்க முடியாது. பேச்சு சுதந்திரம்கூட இல்லாது, ஒரு பாஸிஸ்டு ஸ்தாபனமாகக் காங்கிரஸை மாற்றிவிடலாம் என்ற நினைப்பு சிலருக்கிருக்குமானால், நாம் எங்கு போய்க்கொண்டிருக்கிறோம் என்பதை நேர்மையான காங்கிரஸ் வாதிகள் நன்கு உணரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

ஆகஸ்டு தீர்மானத்தைப்பற்றி காரசாரமாகப்பேசுகிறார் ஸ்ரீபாடீல். "அந்தத்தீர்மானம் இன்னும் நிலைத்து நிற்கின்றது. அதன் காரியாம்சஷரத்துகள் மட்டுமே காலாவதியாகிவிட்டன" என்று கூறுகிறார். இந்தக் காரியாம்ச ஷரத்தைத் தவிர வேறு எந்த பாகத்தை நாமோ மற்றவர்களோ ஆட்சேபித்திருக்கிறோம்? அப்படியிருந்தும் அமுலுக்குவராத ஒரு தீர்மானத்தின் ஷரத்தை—காலாவதியான ஒரு ஷரத்தை—வைத்துக்கொண்டு, இந்தக் காலாவதியான ஷரத்தை அ. க. கா. கமிட்டியில் எதிர்த்தவர்களுக்கும் இடமில்லை என்று தீர்மானிப்பது என்ன வீர "கர்ஜனையோ" நமக்குப் புரியவில்லை. அதுபோகட்டும்.

### சொல்லுக்கும் செயலுக்கும் முரண!

ஆகஸ்டு தீர்மானத்தில் இந்தப் பகுதி போய்விட்டால், பாக்கியுள்ளது, இந்தியாவிற்கு தேசீய சர்க்காரைக்கோரும் பகுதிதான் அதை நடைமுறையில் கொண்டுவருவதற்கு என்ன உபாயம்? என்ன திட்டம்?

நிர்மாண திட்டத்தையே எடுத்துக் காட்டுகிறார் இதைப்பற்றி, அவர் பேசிய வாசகங்களையே இங்கு கொடுக்கிறோம். "தன்னுடைய நிர்மாணத்திட்டத்தை காந்திஜி போதிக்கிறார்; பரப்புகிறார்; வாழ்ந்து காட்டுகிறார். ஆனால் அத்திட்டத்தின் உயர்ந்த தத்துவத்தை, நாம் இன்னமும் உணரவில்லை. அது நமக்கு வெறும் கோஷமாகவே இருந்துவிட்டது. காந்திஜி உபவாசத்தைப் பற்றித் தகவல் கிடைத்த பின்புதான் நிலை கலங்கி நிர்மாணத் திட்டத்தைப்பற்றி நினைக்க ஆரம்பித்துள்ளோம். இது உண்மையான ஆர்வமாக உருவெடுக்க வேண்டும்."

25 வருஷங்களாக, காந்திஜி கிழித்த கோட்டிற்கு ஒரு மயிரிழைகூட நகர்வதில்லை என்று கூறும் சுத்த காந்தீயவாதியான ஸ்ரீ பாடீலுக்கு நிர்மாண திட்டத்தின் உயரிய தத்துவத்தை உணர்த்துவதற்கு, காந்திஜீயின் உபவாசச் செய்தி கிடைக்க வேண்டும்! புத்திபூர்வமாக ஆலோசனை செய்து பார்த்து, அதில் நம்பிக்கை ஏற்படுவதனாலல்ல அந்த உணர்வு. தேசத்தின் ஒப்பற்றதலைவர் உண்ணாவிரதம் இருந்து விடுவாரோ என்ற பயத்தினால் இந்த உணர்வு!

ஆனால், மகாநாட்டில், அவர் கூறியபடி, இந்த உணர்ச்சி "உண்மையான ஆர்வமாக உருவெடுத்து நின்றதா? முக்காலும் இல்லை. இதற்கு முகாந்திரம் வேண்டுமா?

நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக சங்கம் ஸ்தாபிக்க வேண்டும் என்பதே மகாநாட்டில் கொண்டுவரப்பட்ட முக்கியமான

(6-ம் பக்கம் பார்க்க)

## தலைவர்களை விடுவித்து தேசீயசர்க்கார் அமைக்கவும்!

## பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் தீர்மானம்!

### நிர்வாகக்கமிட்டிக்கு தோல்வி!

"இந்தியாவில் சுயேச்சையான தேசியசர்க்கார் ஏற்படுத்துவதன் மூலம் பாசிஸ்ட்-எதிர்ப்புப் போராட்டத்தில் வெற்றி சீக்கிரம் காணமுடியும். பாசிஸ்ட்-எதிர்ப்பு சக்திகள் அனைத்தையும் ஒன்றுதிரட்ட முடியும். ஆகவே இந்தியாவில் உடனடியாக பொறுப்புள்ள ஒரு தேசியசர்க்காரை ஏற்படுத்தும் நோக்கத்துடன் இந்திய தலைவர்களுடன் பேச்சுவார்த்தைகள் ஆரம்பித்து இப்பொழுது ஏற்பட்டுள்ள அரசியல் முட்டுக்கட்டையை ஒழிக்கவேண்டுமென்று இந்த மகாநாடு கருதுகிறது. இத்தகைய நடவடிக்கையின் மூலம் இந்திய மகாஜனங்களை பாசிஸ்ட்-எதிர்ப்புப் போரில் அணிவகுக்க முடியும். சமரஸப் பேச்சுகளை ஆரம்பிப்பதற்கு சௌகரியமாக இந்தியத் தலைவர்களை விடுதலை செய்யவேண்டும் என்று நாங்கள் கோருகின்றோம்".

போனவாரம் கூடிய பிரிட்டிஷ் தொழிற்கட்சி மகாநாட்டில், ரயில்வே தொழிலாளர்களின் தேசிய யூனியனால் இந்தத் தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டு, கட்சியின் தலைமை எதிர்த்தபோதிலும், பிரதிநிதிகளால் நிறைவேற்றப்பட்டது.

# காங்கிரஸும்-கம்யூனிஸ்டுகளும்

## “கம்யூனிஸ்டுகளை விலக்காதே” பிரிந்துபோகும் உரிமையுண்டு

—அப்துல் கய்யூம்—

*[1920 ஒத்துழையாமை இயக்கத்தில் மௌலானா மகமதலியின் சகபாடியாக விளங்கினார் அப்துல் கய்யூம். கடந்த 15 வருட காலமாக காங்கிரஸ் சேவையிலும் செஞ்சட்டையினர் இயக்கத்திலும் ஈடுபட்டிருக்கிறார். எல்லைப்புற மாகாண காங்கிரஸ் தலைவர்; மத்திய சட்டசபை காங்கிரஸ் கட்சியில் தமிழ் நாட்டுத் தலைவர் காலஞ்சென்ற* ஸத்தியமூர்த்திக்குப் *பிறகு உப தலைவர் பதவியை நிர்வகிக்கிறார். ‘பீப்பிள்ஸ் வார்’ நிருபரிடம் அவர் அளித்த பேட்டியின் சாராம்சத்தை கீழே தருகிறோம். ப-ர்]*

### கம்யூனிஸ்டுகளை விலக்குவது

“காங்கிரஸும் கம்யூனிஸ்டுகளும் என்ற பி. ஸி. ஜோஷியின் கட்டுரையைப் படித்தேன். வெகு நன்றாக எழுதப்பட்டிருக்கிறது. கம்யூனிஸ்டுகளை விலக்குவதை நான் எதிர்க்கிறேன். முதலாளிகளுக்கு காங்கிரஸில் இடமுண்டானால் கம்யூனிஸ்டுகளை தடைசெய்ய காரணமேயில்லை.

### காங்கிரஸ்—லீக்

“முஸ்லிம் லீக் முஸ்லிம்களின் சுய நிர்ணய உரிமையை, அதாவது, முஸ்லிம் தேசிய யூனிட்டுகளின் சுய நிர்ணய உரிமையை கேட்கிறது. பரிபூர்ணமாக பிரிந்து போவதா அல்லது மத்தியசர்க்காருக்கு சில அதிகாரங்களை ஒப்படைத்து விட்டு மாகாண சுயாட்சியை ஏற்றுக் கொள்வதா என்பதை தீர்மானிக்க இந்த யூனிட்டுகளுக்கு உரிமையுண்டு. எல்லைப்புற மாகாணத்தைச் சேர்ந்த ஆப்கானியர்களாகிய எங்களுக்கும் இந்த உரிமை உண்டு. பாக்கிஸ்தான் எங்கள் ஆப்கான் தேச பக்தியை உணரவேண்டும்.

“ஸர்வஜனவாக்கு எடுத்தபிறகு, பிரிந்துபோகலாம் என்று காந்திஜி அங்கீகரித்திருப்பது வாஸ்தவம் தான். ஆனால் பிரிவினைக்கு முன்னால் பாதுகாப்பு, வியாபாரம் முதலிய பிரச்னைகளை நிர்வகிக்க ஒரு மத்திய நிர்வாகம் ஏற்படவேண்டுமென்று நிபந்தனை விதிக்கிறார். 2, 3 அல்லது அதற்கு மேற்பட்ட தனிஆட்சிகள் ஏற்பட்ட போதிலும், முஸ்லிம் பொதுமக்களின் முடிவுப்படி நடக்க சம்மதித்திருக்க வேண்டும்.

“காங்கிரஸும் லீகும் ஒன்றுபடாவிட்டால் எல்லோருக்கும் கஷ்டம். நமக்கு பாக்கிஸ்தானும் கிடைக்கப்போவதில்லை; ஹிந்துஸ்தானும் கிடைக்கப்போவதில்லை. பிரிட்டிஷ்ஸ்தான்தான் சிரஞ்சீவியாய் வாழும். அதனால், காந்தி-ஜின்னா சம்பாஷணைகள் விட்ட இடத்திலிருந்து ஆரம்பித்து, கால தாமதம் இல்லாமல் சமாஸத்துக்கான பிரயத்தனங்கள் செய்ய வேண்டும்.

### உணவுப் பிரச்னைபற்றி

“உணவு விநியோகம் செய்யும் நிர்வாகத்தில் ஊழல் தலைவிரித்தாடுகிறது.........உணவு உற்பத்தியை அதிகரிப்பதிலும் சர்க்கார் முன்னேறவில்லை.

“பொதுஜன ஸ்தாபனங்கள் கொள்ளைலாபக்காரர்களையும் சேமிப்பாளர்களையும் எதிர்த்து அறப் போர் செய்யவேண்டும்.

“அரசாங்கமே விவசாயிகளிடமிருந்து தானியத்தை நேரடியாக வாங்கவேண்டும்; மக்களுக்கு நேரடியாக விற்கவேண்டும். மத்தியில் லாபப்பேராசைக்காரர்களுக்கு இடமிருக்கலாகாது.

“மாகாணங்களிலும் மத்தியசர்க்காரிலும் ஜனநாயக ஆட்சி ஏற்பட்டால்தான் நெருக்கடியை நிவர்த்தி செய்ய முடியும்; அதனால் அதுவரை ஒன்றும் செய்யாமலிருப்பதென்று அர்த்தமல்ல. விவசாயிகள் கள்ள மார்க்கெட்டுக்காரர்களுக்கு விற்கக்கூடாது என்று தேசபக்திபிரசாரம் செய்யவேண்டும். உபரியை சர்க்காருக்கு விற்கச் செய்யலாம்; ஆனால் லஞ்சமனப்பான்மையுள்ள கண்டிராக்டர்களிடம் கண்டிப்பாய் விற்கலாகாது.

“காங்கிரஸும் லீகும் ஒருமனப்பட்டு இந்த வேலையை செய்ய வேண்டுமென்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது”.

## வங்காளத்தில் முஸ்லிம் லீகையும் ஒதுக்கு
## கிரன்சங்கர்ராய் சர்வாதிகாரம்

நவம்பர், 27, 28 தேதிகளில் கல்கத்தாவில் ஒரு வங்க காங்கிரஸ் ஊழியர்கள் மகாநாடு நடந்தது.

மகாநாட்டை கூட்டியவர் கிரன் சங்கர் ராய். காந்திஜியின் காங்கிரஸ்-லீக் ஒற்றுமை முயற்சிகளை முறியடிக்க சியாம் பிரஸாத்துடன் சேர்ந்துகொண்டு பிரம்ம பிரயத்தனம் செய்த கிரன் சங்கர்தான். அவரால் பொறுக்கி எடுக்கப்பட்ட 200 ஊழியர்கள் விஜயம் செய்தனர்.

வங்க காங்கிரஸ் இயக்கத்தின் முக்கிய பகுதியான கம்யூனிஸ்டுகள் அழைக்கப்படவில்லை. அவர்களுடன் பொது வேலைகளில் சேர்ந்துழைத்த சட்டோபாத்யாயா (நாடியா ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டி தலைவர்) போன்றவர்களுக்கும் அழைப்பு இல்லை. காங்கிரஸ் லீக் ஒற்றுமை விழையும் ஜே. ஸி. குப்தா போன்ற தலைவர்களும் விலக்கப்பட்டனர். வங்காள

**வங்க நிருபர்**

காந்தி எனப் பெயர்பெற்ற ஸதீஷ் தாஸ் குப்தாவின்கோஷ்டியும், அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர் பிரபுல்லா கோஷ் கோஷ்டியும் மகாநாட்டை பகிஷ்கரித்தனர்.

முதல் நாள் தலைமைப் பிரசங்கத்தை டாக்டர் ஸன்யால் படித்தார். (தலைவர் நோய் வாய்ப்பட்டிருந்ததால்) “ஒன்று பட்டால் வாழ்வோம்; பிளவுபட்டால் வீழ்வோம். அதனால் சகல கோஷ்டிகளும் நபர்களும் ஐக்கியமா யிருக்கவேண்டும்” என்றார் தலைவர்.

### ஆபாச கட்டுக்கதை

தலைமைப் பிரசங்கத்துக்கு பின் பம்பாய் மேயர் நகீன்தாஸ் மாஸ்டர் ஒரு பிரசங்கம் செய்தார். “நாம் போராட்டம் ஆரம்பித்தோம்; கம்யூனிஸ்டுகள் நம்பிக்கை துரோகம் செய்தனர்..... நீங்கள் அவர்களை உதைத்தாலும் அவர்கள் மீண்டும் வந்து உங்கள் காலை நக்குவார்கள்” என்று பேசினார். “போராட்டமல்ல; அடக்குமுறையால் நிலை கலங்கி மக்கள்செய்த வருத்தப்படத்தக்கவேலைகள்” என்று காந்திஜி கூறியபிறகு, “ஏமரி பேச்சைக் கேட்டு ஏமாந்து போனேனே!” என்று மஷ்ரூவாலா பகிரங்கமாக துக்கம் தெரிவித்த பிறகு பம்பாய் மேயர் நாசவேலைகளை காங்கிரஸ் போர் என்கிறார்!

இரண்டாவது நாள் காலையில் கிரன்சங்கர் தன் சீடர்களின் தனிக் கூட்டம் நடத்தினார். “கம்யூனிஸ்டுகளை ஒழிப்போம்” என்று போர் முரசு கொட்டினர். “இச்சமயம் காங்கிரஸை பிளவுபடுத்தினால், ஹிந்துமகா சபைக்குதானே கொண்டாட்டம்!” என்றனர் ஊழியர்கள். “இது ஒரு அகில இந்திய பிரச்னை. அகில இந்திய தலைமையின் உத்திரவாக இதை பாவிக்க வேண்டும்” என்று பதிலளித்தார்.

ஒத்திகை முடிந்தது. மத்தியானம் நாடகம் (மகாநாடு) மீண்டும் ஆரம்பமாயிற்று.

### லீகுக்கும் தடை

“கம்யூனிஸ்டு கட்சியுடன் அரசியல் தொடர்புகூட வைத்துக் கொள்ளக் கூடாது” என்ற தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டது. முஸ்லிம் லீக், மகாசபையையும் இதில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்ற திருத்த பிரேரேபணை ஏற்றுக்கொள்ளப்பட்டது!

போஸ் கட்சியுடனும் அரசியல் தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது என்று சிலர் கூறினர்கள். “போஸ் கட்சி, ஆகஸ்டு போராட்டத்தில் உதவினர்; கம்யூனிஸ்டுகள் தான் எதிர்த்தனர்” என்று சமாதானம் கூறப்பட்டது.

ஐ. மா. காங்கிரஸ் வாதிகள் “கம்யூனிஸ்டுகள் காங்கிரஸ் ஸ்தாபனத்திலிருக்கக்கூடாது” என்றனர். பம்பாயில் பாடீல் கோஷ்டி “கம்யூனிஸ்டுகளுடன் அரசியல் தொடர்பே கூடாது” என்றது. வங்காளத்தில் கிரன்சங்கர் கோஷ்டி இன்னும் ஒரு படி முன்னேறி, “முஸ்லிம் லீகுடனும் அரசியல் தொடர்பு கூடாது” என்று கூறிவிட்டது.

### ஸன்யால் வெளியேறினர்

காங்கிரஸ் சட்டசபைக் கட்சியின் உபதலைவர் டாக்டர் ஸன்யால் இதை எதிர்த்தார். “கம்யூனிஸம் ஒரு சாப சொல்லாகி விட்டது. ஆனால் கம்யூனிஸ்டுகள்தான் பஞ்ச காலத்தில் தலை சிறந்த தேசிய சேவை செய்தனர்” என்றார். “காங்கிரஸ் ஜாப் எதிர்ப்பு ஸ்தாபனம்; போஸ் கட்சி ஜாப் ஆதரிப்பு கும்பல். போஸ் கட்சியை முறியடிக்க வேண்டும்” என்றார். முரார்கா, (அ. இ. கா. க. மெம்பர்) வும் ஜிதேன் பாபுவும் அவரை ஆதரித்தனர். பஞ்சகாலத்தில் கிரன் சங்கர் வாய்மூடி மௌனியாக கை கட்டிக்கொண்டிருந்ததை ஞாபகப் படுத்தினார் ஜிதேன். ஆனால் எல்லாம் செவிடன் காதில் சங்கு ஊதிய கதையாகி விட்டது. ஸன்யாலும் முரார்காவும் சபையைவிட்டு வெளியேறினர். முதல் நாள் வந்த 200 பேரில் வோட்டு எடுக்கும்போது சபையிலிருந்தது 80, 90 பேர்தான். அதில் நடுநிலைமை வகித்தது 20 பேர்.

தீப்பொறி பறக்க பிரசங்கங்கள் செய்த பிறகு, கம்யூனிஸ்டுகள், லீக் இவைகளுடன் சேர்ந்து சேவைசெய்வதை தடை செய்த பிறகு, சுதந்திரத்துக்கு என்ன செய்யவேண்டும் என்பதுபற்றி ஒரு வார்த்தையில்லை. மலேரியா கல்கத்தாவுக் குள்ளேயே புகுந்துவிட்டது. லக்ஷக்கணக்கான மக்கள் நோயாளிகள். பஞ்சத்தின் விட்டகுறை, முறிந்துபோன கிராம வாழ்க்கை சீரமைக்கப்பட வேண்டும். அகதிகளுக்கு ஆதாரம் தேட வேண்டும். இத்தகைய சோதனைக் காலத்தில், வங்கத்தின் வாழ்வுக்கு நேர்ந்திருக்கும் விபத்துகளை சமாளிக்க திட்டமில்லை.

### போஸ் பாதையில்

5 வருடங்களாக சுபாஷ் போஸ் பிளவு சூழ்ச்சிகளால் காங்கிரஸ் சீர் குலைந்து கிடக்கிறது. அதோடுகூட புதிய பூதம் ஒன்று புறப்பட்டுவிட்டது. சியாம் பிரஸாத் காங்கிரஸ் ஊழியர்களை மகாசபை வலைக்கு இழுக்கிறான். எங்கும் வகுப்பு துவேஷத் தீ மூட்டிவிடப்படுகிறது. இச் சமயத்தில் சித்தரஞ்சன்தாஸ் பாதையில் சகல காங்கிரஸ் கோஷ்டிகளையும் ஐக்கியப்படுத்தி, வங்கத்தின் முதல் அரசியல் ஸ்தாபனமாக விளங்கும் முஸ்லிம் லீகுடன், முற்போக்காளர் செல்வாக்கு வலுத்து வரும் லீகுடன் ஒன்றுபட முயற்சிக்காமல், சுபாஷ் போஸ் பாதையில் காங்கிரஸை சின்னா பின்னமாக்குகிறார் கிரன்சங்கர். “தன் கோஷ்டிதான் காங்கிரஸ்” என்று கூறிக்கொண்டு லீக், கம்யூனிஸ்டு இயக்கங்களை எதிர்க்கிறார்.

வங்காள காங்கிரஸ் இயக்கத்துக்கே ஜீவ மரண சோதனை ஏற்பட்டிருக்கிறது. கிரன்சங்கரின் குலைவு தடுக்கப்படாவிட்டால், காங்கிரஸ் பல பிரிவுகளாக பிளவுபடும்; சியாம் பிரஸாத் கைதான் பலப்படும். வகுப்பு துவேஷம் வகுப்பு கலகத்திலும், முடியலாம். இந்த ஆபத்தை தவிர்க்கவேண்டும். சகல காங்கிரஸ் பகுதிகளையும் அரவணைத்து நிற்கும் காங்கிரஸ் இயக்கம், முஸ்லிம் லீகுடன் ஒன்றுபடமுயலும் காங்கிரஸ் இயக்கத்தால்தான் இது சாத்தியம்.

## தேசபக்தன் டயரி

—தோழன்—

### இதுவா காந்திஜியிடம் நம்பிக்கை?

“பொதுமக்களின் துன்பத்தை துடைக்கவும், அவர்களை, பஞ்சம், பிணியிலிருந்து பாதுகாக்கவும் காங்கிரஸ்வாதிகளும் லீகர்களும் ஒன்றாக நின்று, கூட்டாக உழைக்க வேண்டும்”—மகாத்மா காந்தி.

காந்திஜியின் தலைமையில் பரிபூர்ண நம்பிக்கை தெரிவித்துவிட்டு, “காங்கிரஸ்வாதிகள் முஸ்லிம் லீக் போன்ற வகுப்புவாத ஸ்தாபனத்துடன் எவ்வித அரசியல் தொடர்பும் வைத்துக்கொள்ளக்கூடாது” என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது வங்க காங்கிரஸ் ஊழியர்கள் மகாநாடு.

* * *

### காந்தி சீடர்களாம்!

“காந்திஜி உங்கள் கடிதத்துக்கு வந்தனம் செலுத்துகிறார். கம்யூனிஸ்டுகள் காங்கிரஸுக்குள் அனுமதிக்கப்படலாகாது என்று அவர் யாரிடமும்சொல்லவில்லை. அவருக்கு தெரிந்தவரையில், காங்கிரஸின் லட்சிய பத்திரத்தில் கையெழுத்திட்டு, நான்கு அணா செலுத்தும் யாரையும்அங்கத்தினராவதிலிருந்து தடுக்கமுடியாது” பியாரிலால் ஆந்திர காங்கிரஸ்வாதிக்கு எழுதிய கடிதம்.

“கம்யூனிஸ்டுகள் காங்கிரஸ் மகா சபையில் சாதாரண அங்கத்தினராவதிலிருந்தும் தடை செய்யப்பட்டிருக்கின்றனர்” கேரளா காங்கிரஸ் ஊழியர்கள் மகாநாடு.

* * *

### ஆக்கவேலையா? நாசவேலையா?

ஆந்திரத்தில், காளேச்வரராவ் காங்கிரஸுக்கு அங்கத்தினர்களே சேர்ப்பதில்லை யென்று தீர்மானித்து விட்டார்! காளேச்வரராவ் காங்கிரஸை நேசிக்கிறாரா அல்லது கம்யூனிஸ்ட் வெறுப்புஉணர்ச்சிமாத்திரம் தான் அவரிடமிருக்கிறதா வென்பதை காங்கிரஸ்வாதிகள் யோசிக்க வேண்டும். காங்கிரஸ் ஸ்தாபனத்தையே புனரமைக்காமலிருந்தாலும் இருப்பார்; கம்யூனிஸ்டுகள் அவருடன்சேர்ந்து காங்கிரஸை கட்டுவதில் உழைக்க விடமாட்டார்! பொதுமக்களை காங்கிரஸில் சேர்த்து, தேர்தல்களை நடத்தினால், காளேச்வரராவ் கோஷ்டிக்கு ஆந்திர காங்கிரஸின் புனிதப்பெயரால் தாங்கள் பேச முடியாதென்பது தெரியும்! இது காங்கிரஸை பலப்படுத்தும் ஆக்கவேலையா? நாசவேலையா?

* * *

### அபத்தக் களஞ்சியம்

பேராசிரியர் ரங்கா நிடுப்ரோலுவில் பேசிய சில வாக்கியங்கள் இவை. இதற்கு விமர்சனம் தேவையில்லை

“காங்கிரஸை நாசம் செய்துவிட்டு தொழிலாளர் சர்வாதிகாரம் ஸ்தாபிக்க வேண்டுமென்பதே கம்யூனிஸ்டுகளின் நோக்கம். ரஷ்ய கம்யூனிஸ்டுகளும், இந்திய கம்யூனிஸ்டுகளும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ரஷ்ய கம்யூனிஸ்டுகள் விவசாயிகளிடமிருந்து நிலத்தைப் பிடுங்கினார்கள்; லக்ஷக்கணக்கான விவசாயிகளைக் கொன்றார்கள். விவசாயிகளை தொழிலாளி ஆட்சிக்கு உட்படுத்தினார்கள். இந்தியாவிலும் இதையே செய்யப் போகிறார்கள்... காந்திஜியை பின் தொடர்வோம்! கம்யூனிஸ்டுகளிடமிருந்து பொது மக்களை பாதுகாப்போம்! விவசாய, மாணவர்கள், வாலிபர்கள், தொழிலாளிகள் மாதர் காங்கிரஸ்களை ஏற்படுத்துங்கள்”

* * *

### பொய்யும் புனைசுருட்டும்

‘பாரததேவி’க்கு தமிழர்கள் ஏமாந்தசோணகிரிகள் என்ற நினைப்புபோலும்! “இந்திய மக்களுக்கு அமெரி பிரதிநிதி; காங்கிரஸ் தலைவர்கள் ஐந்தாம்படைக்காரர்கள்” என்று டாங்கே பேசியதாக, “டாங்கேயின் புது மோகம்; டாங்கேயின் பிதற்றல்” என்று தலைப்புகள் கொடுத்து எழுதுகிறது. அதே பிரசங்கம்பற்றி தினமணி தந்த செய்தியை கீழே தருகிறேன்:—“இந்தியாவின் உண்மைத் தலைவர்கள், காங்கிரஸ் தலைவர்கள்தான்; கனம் ஏமரியல்ல என்பதை டாங்கே நினைப்பூட்டினார்”.

“கம்யூனிஸ்டுகள் காங்கிரஸ் விரோதிகள்” என்று தமிழர்களிடம் பிரசாரம் செய்வதற்கு ‘பாரததேவி’ சொல்லும் பொய், புனைசுருட்டுகளை பாருங்கள்! இந்த பத்திரிகைதான் காங்கிரஸ் சங்கத்தின் பத்திரிகை என்றும் சொல்லப்படுகிறது!

—ஒரிஸ்ஸாவில்—

## காங்கிரஸ் தலைவர்கள் கூட்டம்
### கம்யூனிஸ்டுகளை விலக்குவது காங்கிரஸை பிளவுபடுத்தும்

*நவம்பர் 19-ம் தேதி ஒரிஸா காங்கிரஸ் வாதிகள் மகாநாடு கூடிற்று. 60 காங்கிரஸ் வாதிகள் விஜயம் செய்தனர்.*

நாட்டில் நடந்த நாச வேலைகளுக்கு காங்கிரஸ் பொறுப்பாளியில்லை யென்றும் தலைவர்கள் கைது செய்யப்பட்ட பிறகு தேசத்தில் நிலவிவரும் வருந்தத்தக்க நிலைக்கு சர்க்காரின் அடக்குமுறையே ஜவாப்தாரி யென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. காந்திஜியின் தலைமையில் நம்பிக்கை தெரிவித்து அவருடைய பதினான்கு நிர்மாணத் திட்டங்களை அனுஷ்டிக்க சபதம் ஏற்றது.

பம்பாய் சம்பாஷணைக் காலத்தில் ஜனாப் ஜின்னாவுக்கு காந்திஜி சமர்ப்பித்த யோசனைகளை முழுமனதுடன் ஆதரித்தது. காங்கிரஸ் சோஷியலிஸ்டு, ஹிந்துமகா சபா போக்குகளுக்கு இது நல்ல தோல்வி.

### நிவாரணம்

பஞ்சத்தால் பஞ்சையாகி நிற்கும் மாகாணம் இது. வெள்ளப் பெருக்கால் 5 லட்சம் ஏகரா பூமியில் பயிர் செய்யப்பட்டது, பாழடைந்து விட்டது. சர்க்காரே வெள்ள நிவாரணத்துக்கு நிதி திரட்டுகின்றனர். ஒரிஸா நிவாரணக் கமிட்டியின் காரியதரிசிகளில் பழம் பெரும் காங்கிரஸ் தலைவர் பிட்சிரானந்த தாஸ் ஒருவர் ஆயினும் விஷயாலோசனைக் கமிட்டியிலிருந்து நிவாரண வேலைபற்றி ஒரு தீர்மானமும் வரவில்லை.

ஊழியர்கள் மகாநாட்டில் இந்த பிரச்னையை எழுப்பினர். நிவாரண இயக்கமில்லாத நிர்மாண திட்டமா? என்று கேட்டனர். இறுதியில் தலைவர்களும் ஒப்புக்கொண்டனர்.

### கம்யூனிஸ்டுகள்

“கம்யூனிஸ்டுகளை விலக்க வேண்டும்” என்றார் விஷயாலோசனைக் கமிட்டியில் ஒரு காங்கிரஸ் சோஷியலிஸ்டு. “நாம் காங்கிரஸை பலப்படுத்தக்கூடி யிருக்கிறோம்; பிளவுபடுத்த வல்ல” என்று சுடச்சுட பதிலளித்தனர் சகலரும். எல்லா ஜில்லாக்களிலிருந்தும் கம்யூனிஸ்டு காங்கிரஸ்வாதிகள் அழைக்கப் பட்டிருக்க, பூரி கம்யூனிஸ்டுகளுக்கு மாத்திரம் அழைப்பனுப்பாததை ஊழியர்கள் கண்டித்தனர்.

நிர்மாணத்திட்டத்தை நடைமுறையில் அனுஷ்டானத்துக்கு கொண்டு வர ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

ஒரிஸா காங்கிரஸ்வாதிகள் ஹிந்து மகாசபையின் ஒற்றுமை எதிர்ப்பு கோஷத்தையும் காங்கிரஸ் சோஷியலிஸ்டுகளின் கம்யூனிஸ்டு எதிர்ப்பு கோஷத்தையும் நிராகரித்துவிட்டனர். காங்கிரஸ் ஒற்றுமையை காப்பாற்றி யிருக்கின்றனர். நிவாரண திட்டத்தை வரவேற்றிருக்கின்றனர்.

## உணவு நெருக்கடி தீர்க்க

# சென்னை காங்கிரஸ் தலைவர் கூறும் யோசனை

[சென்னைநகர காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசி, மா. பொ. சிவஞான கிராமணி எழுதிய கட்டுரை இது. கள்ளமார்க்கெட்டை ஒழிக்கும் அறப்போரில் அணிவகுக்குமாறு காங்கிரஸ்வாதிகளையும் இதர கட்சியினரையும் அறைகூவி அழைக்கிறார். அதற்காக ஒரு திட்டமும் சமர்ப்பிக்கிறார்.—ஆர்.]

மா. பொ. சிவஞான கிராமணி

"லட்சக் கணக்கானவர்கள் பட்டினியால் வாடுவதும், சூதாட்டம் என்று நான் கருதும் கள்ள மார்க்கெட்டுகளும் எனக்கு கவலையளிக்கின்றன இந்த 'சங்கடமான நிலமையை நிவர்த்திக்கும்படி என் சகபாடிகளை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இதுதான் அவர்களின் முதல்கடமை".

இது காந்திஜியின் புண்பட்ட உள்ளத்திலிருந்து வெளிப்பட்ட பொருள் பொதிந்த வாக்கு. இவ்வாக்கை நிறைவேற்ற வேண்டியது இந்தியர்கள் கடமை; அதிலும் தேசபக்தனுக்கு இது நீங்காக் கடமை.

இன்றுபஞ்சத்தைப்போக்கி ஏழை மக்களை காப்பாற்றியே தீரவேண்டுமென்று அவர் துடியாய் துடிக்கிறார். பட்டினி கிடக்கவும் எண்ணுகிறார்.

### இன்றைய நிலைமை

வங்காளத்தில் தோன்றிய சோற்றுப் பஞ்சம் தமிழ் நாட்டுக்கும் வந்துவிட்டது.

உணவு பிரச்னையில் கள்ளமார்க்கெட் ஒரு முக்கியபகுதி. பஞ்சம் பரவ இதுவே காரணமாகும். இதை வேருடன் கல்லியெறிந்தாலொழிய வறுமை தொலையாது. பொதுவாக எல்லோரும் கள்ளமார்க்கெட்டை வெறுக்கின்றனர்; ஆனல் செயலில் ஆர்வம் காட்டுவதில்லை. சர்க்காரும் அரசியல் கட்சிகளும் தங்கள்தங்கள் கடமைகளை சரிவர செய்திருந்தால் இன்றைய நிலைமை வேறுவிதமாயிருந்திருக்கும். இவ்விருதரப்பினரும் ஒன்றுகூடி ஒருமனப்பட்டு வேலை செய்யாமல், தங்கள்தங்கள் யதாஸ்தானத்தில் நின்றுகொண்டு "கள்ளமார்க்கெட் ஒழிக!" என்று கோஷித்தால் மட்டும் அது ஒழியாது.

முதலில் சர்க்காரையே எடுத்துக் கொள்வோம். உணவுபொருள் உற்பத்தியைப் பெருக்க சரியானபடி முயற்சி எடுக்கவே யில்லை ஆங்காங்கு தேங்கிக்கிடக்கும் பொருள்களை பற்றாக்குறைப் பிரதேசங்களுக்கு அனுப்பிவைப்பதில் அதிகாரிகள் காலதாமதம் செய்கின்றனர். அதனல் பொருள்கள் வீணாகி மண்ணில் மறைகின்றன. மேலும் "போக்குவரத்து விஷயத்தில் ராணுவத்துக்கே முதன்மை தருவோம்" என்று சர்க்கார் சொல்வது யுத்த தர்மப்படி சரியானதே என்றாலும் அதற்கும் எல்லை வேண்டும். இவ்வாறு உற்பத்திப் பெருக்காமை, போக்குவரத்து வசதி செய்யாமை என்ற சர்க்காரின் உணவு கொள்கையில் ஏற்பட்ட இரண்டு பொத்தல்களே கள்ளமார்க்கெட் தோன்றி நிலைபெற காரணமாக அமைந்துவிட்டது.

### சர்க்கார் கடமை

சர்க்கார்முதலில் தங்கள் தவறுகளை திருத்திக்கொள்ளவேண்டும். எல்லா விளைநிலங்களையும் விளைச்சலுக்கு கொண்டுவந்து உற்பத்தியைப் பன்மடங்கு பெருக்கவேண்டும்.

ஒரு ஜில்லாவில் உற்பத்தியாகும் பொருளில் அந்த ஜில்லாவின் தேவைக்கு போக எஞ்சியவற்றில் ஒரு மணியும் விடாது விலைக்கு வாங்கி பற்றாக்குறை பிரதேசங்களுக்கு உடனடியாக அனுப்பிவைக்க வேண்டும்.

கள்ளமார்க்கெட் நடத்துபவர்களைக் கண்டுபிடித்து தண்டிப்பதில் அதிகாரிகள் அதிக அக்கரை கொள்ளவேண்டும். இதில் சிறிய வியாபாரி, பெரிய வியாபாரி என்ற வித்தியாசம் காட்டக்கூடாது. சமீபத்தில் நான் பத்திரிகைகளில் படித்த இரு செய்திகளை உதாரணமாகக் கூறுகிறேன். அதாவது தூத்துக்குடியில் பிறருடைய ரேஷன் கார்டை உபயோகித்த ஏழைப்பெண்மணிக்கு 2 மாதம் சிறைவாசம் விதிக்கப்பட்டது.

ஆனல் சென்னையில் ஒரு பிரபல கம்பெனியின் முதலாளி மீது பொருளை பதுக்கிவைத்ததாகவும், 4 ரூ. பொருளை 40 ரூபாய்க்கு விற்றதாகவும் தொடரப்பட்ட வழக்கில் வெறும் அபராதம் மட்டும் விதிக்கப்பட்டது. கொள்ளைலாபப் பேர்வழிக்கு அபராதம் விதிப்பதால் என்ன பலன் ஏற்படும்?

இவ்வித கொள்ளைலாப முதலாளிகளில் அரசியல்வாதிகளும் கலந்திருக்கின்றனரென்பதில் சந்தேகமில்லை. இத்தகையவர்களைக் கண்டுபிடித்து அவர்களது அரசியல் பூர்வோத்திரங்களை வெளியிட்டு சந்திசிரிக்கச் செய்யவேண்டும். சூதாட்டம் என்று காந்திஜி கருதும் கள்ள மார்க்கெட்டுடன் சம்பந்தமுள்ள அரசியல் வாதிகளுக்கு தாட்சண்யம் காட்டுவது விபரீதமாகும்.

### கட்சிகளின் கடமை

உணவு பிரச்னையில் அரசியல் கட்சிகளின் பொறுப்பு மிகவும் அதிகம். ஜனங்கள் சொல்லொணு துயரத்தில் சிக்கியுள்ள இச்சமயம் எல்லா கட்சிகளும் தங்கள் கடமையை சரிவரச் செய்வதில்லை. வங்காளத்தில் மக்கள் அணியணியாய் மாண்ட கோரச்செய்தியைக் கேட்டும், அதே நிலைமைக்கு தமிழ்நாடு வருவதை நேரில் பார்த்தும் தலைவர்கள் மனம் புதைக்கிருரில்லை. சொந்த சகோதரர்கள் துன்பத்திற் சாதல் கண்டும் சிந்தை இறங்காத இவர்களின் நிலை என்னென்பேன்.

பொதுவாக கட்சிகளும் சிறப்பாக அரசியல் தலைவர்களும் தங்கள் வேற்றுமைகளை தாற்காலிகமாகவேனும் விட்டொழித்து ஒன்றுபட்டு நின்று உணவுப்பஞ்சம் போக்க, கள்ளமார்க்கெட்டை ஒழிக்க முன்வரவேண்டியது அவசரமும் அவசியமுமாகும். "பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய மக்களிடம் அதிகாரத்தை ஒப்புவிக்காதவரை நாம் ஒத்துழையாமையை அனுஷ்டித்தே தீரவேண்டும்" என்ற வாதத்தை நானும் அறிவேன். அக்கொள்கை எனக்கும் உடன்பாடே. என்றாலும் உணவு பிரச்னைக்கு இது பொருந்தாது. பஞ்சத்தால் பாதிக்கப்படுவது ஏகாதிபத்தியமல்ல, ஏழைமக்களேயாவர். எந்த மக்களின் பெயரால் சுதந்திரக் கோரிக்கையை எல்லா அரசியல் கட்சிகளும் வற்புறுத்துகின்றனவோ அதே மக்களின் பெரும் பகுதியினர் இன்று பஞ்சத்தால் பரிதவிக்கின்றனர். அவர்கள் வேண்டுவது உரிமை மட்டுமல்ல; உணவும்கூட. எனவே சென்ற காலத்தை மறப்போம்; நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் நினைந்து பணியாற்றுவோம். நமது திட்டம் என்ன?

### திட்டங்கள்

- சகல கட்சிகளும் ஒன்றுகூடி ஒரு உணவு திட்டத்தை வகுக்க வேண்டும். அத்திட்டத்தை நிறைவேற்ற தொண்டர் படை நிறுவ வேண்டும்.
- கள்ளமார்க்கெட்டை நடத்துவதோ அல்லது அதை முறைமுகமாக ஆதரிப்பதோ தேசத்துரோகமென்று பகிரங்கமாக பறைசாற்றவேண்டும். அத்தகைய துரோகிகள் கட்சிகளில் இருந்தால் அவர்களை வெளியேற்றியே தீரவேண்டும்.
- கள்ளமார்க்கெட்டை எக்காரணத்தைக் கொண்டும் உபயோகித்துக்கொள்ளக்கூடாது என்று மக்களிடையே தீவிரமாக பிரசாரம் செய்யவேண்டும்.
- ஜில்லாக்களில் விளையும் பொருளை அந்த ஜில்லாவின் தேவைக்கு வேண்டியது போக மிகுதியானவற்றை விலைக்கு வாங்குவதில் அதிகாரிகள் ஊழல் புரியாதபடியும் மிராசுதார்கள் அல்லது வியாபாரிகள் பொருள்களை விலைக்கு விற்காமல், பதுக்காதபடியும் ஆங்காங்கேயுள்ள அரசியல்வாதிகளும் சங்கங்களும் கண்காணிப்பு செய்யவேண்டும்.
- தேங்கிக் கிடக்கும் பொருள்களைப் பற்றாக்குறைப் பிரதேசங்களுக்கு தாமதமின்றி அனுப்பிவைக்குமாறு சர்க்காரைத் தூண்டவேண்டும்.
- சாதாரணமாக எந்த சமயத்திலும், குறிப்பாக திருமணம், திருவிழா ஆகிய காலங்களிலும் உணவுப்பொருள்களை வீணாக்காமலிருக்குமாறு பொதுஜனங்களிடையே பிரசாரம் செய்ய வேண்டும்.
- ரேஷன் அமுலுக்கு வராத இடங்களில் உடனே அமுலுக்குக் கொண்டுவரும்படி சர்க்காரையும் ரேஷன் வெற்றிகரமாக நடைபெற ஒத்துழைக்குமாறு பொது ஜனங்களையும் தூண்டவேண்டும்.

"தனியொருவனுக்குணவில்லை
யெனில்
ஜகத்தினை யழித்திடுவோம்"

என்ற சபதத்தை ஒவ்வொரு மனிதனும் ஏற்றுத் தீரவேண்டும்.

மதுரையில்

# காணக்கிடைக்காத தங்கம்

[கிருஷ்ணசாமி]

"காணக்கிடைக்காத தங்கம்...".

"எது?"

"விறகுதான். 4 நாட்களாய் விறகில்லாமல் அடுப்பிலே பூனை தூங்குகிறது. ஹோட்டல் இட்லி காப்பிதான் ஆகாரம். அதுவும் குழந்தைகளுக்கு ஒத்துக்கொள்ளவில்லை..."

இவ்வாறு கூறுகிறார் ஒரு வக்கீல். குடும்பத்தில் ஆறுபேர். வென்னீர் போடக்கூட சுள்ளியில்லை. டாக்டர்கள் வக்கீல்கள் கதி இதுவானல், ஏழைகளின் நிலைமையை ஊகித்துப் பாருங்கள்.

6-12-44 ம் தேதி காக்காதோப்பிலிருந்து ஒரு ஜனத்திரள் தாசீல்தாரை பேட்டிகாணச் சென்றது. எதற்கு? விறகுக்காகத்தான். அதில் ஒரு பாட்டி அம்மாள். சாதம் சாப்பிட்டு மூன்று நாட்களாயிற்றும்; தெருவில் விற்கப்படும் பலகாரம் தான் உணவாம்!

நகரம் பூராவும் எங்கு சென்றாலும் ஒரே குரல்தான். விறகு எங்கே கிடைக்கும்? என்பதுதான். "பத்துமைலுக்கப்பால் கிடைக்கும் என்றால் பையனை ஸைகிள் போட்டுக்கொண்டு போய் வாங்கிவரச் சொல்வேன்" என்றார் நான் சந்தித்த டாக்டர் ஒருவர்.

ஆனல் ஹோட்டல்கள் மூடப்படவில்லை. அவைகளுக்கு எங்கேயிருந்தோ விறகு வருகிறது.

மதுரையில் எனிந்த விறகுப் பஞ்சம்?

நகரத்தின் ஜனத்தொகை $2\frac{1}{2}$ லட்சம்; 60,000 குடும்பங்கள். மாத தேவை சுமார் 4000 டன்கள். 178 சில்லரை கடைகள்மூலம் இது வினியோகிக்கப்படுகிறது.

போனவருடம் அக்டோபர், நவம்பரிலும் இதுமாதிரிதான் நெருக்கடி ஏற்பட்டது. சகல கட்சியினரும் அடங்கிய கமிட்டி நெருக்கடி தீர்க்க முன்வந்தது. அதன் கிளர்ச்சி அதிகாரவர்க்கத்தை அசையவைத்தது. ஸ்பெஷல் விறகு தாசில்தார் நியமிக்கப்பட்டார். கள்ளமார்க்கெட்டுகளைக் கண்டுபிடுத்தனர் பொதுமக்கள்.

தாசில்தார் விலை நிர்ணயம் செய்தார். ஒவ்வொரு கடைக்காரரும் எந்தெந்த தெருவுக்கு எத்தனை குடும்பங்கள்? எவ்வளவு சப்ளை செய்யவேண்டுமென்பது வரையறுக்கப்பட்டது. குடும்பங்களுக்கு கார்டுகள் வழங்கப்பட்டன. கணக்குகள் பரிசோதிக்கப்பட்டன. நெருக்கடியும் தணிந்தது.

இது பழைய கதை. புதிய தாசில்தார் வந்தார். வந்தகையுடன் நெருக்கடியும் புனர்ஜென்மம் எடுத்தது!

இன்று, விறகு சப்ளையில் கட்டுப்பாடு இல்லை. தரகன் இட்டதுதான் சட்டம்! வேண்டியதெல்லாம் தாசில்தாரின் பெர்மிட்தான். அந்த பெர்மிட்டுக்கு உரியவர், எங்கே, எவ்வளவு, எத்தனை நாளைக்கு ஒருமுறை என்ன விலையில் வாங்குவது என்பதற்கெல்லாம் வரம்பு கிடையாது. பெர்மிட்டும் இருந்து தரகன் தயவும் இருந்தால் தினசரி வாங்கலாம்; பதுக்கலாம்; புழக்கடை வழியாய் கள்ளமார்க்கெட் வியாபாரம் நடத்தலாம். ஹோட்டல் முதலாளிகள் அதிக விலை கொடுத்து வாங்குகின்றனர்.

இதிலே இன்னெரு விஷயம். 'நகரத்துக்குள்தானே கட்டுப்பாடு; வெளியே தங்கள் தர்பார் நடத்தினல் தட்டிப்பேச யார்' என்பது கள்ளமார்க்கெட் கழுகுகளின் எண்ணம். இதனல் மதுரைக்கு வரும் ரஸ்தாக்களில் சுமார் 50 விறகுகடைகள். கோச்சடை, ஆனியூர், கறுப்பாய் ஊரணி போன்ற கிராமங்களில், கண்டிராக்ட் விடும்பொழுது குறைவாக மதிப்பிடப்படுகிறது. வெட்டும்போது அதிகமாவதை இக்கடைக்காரர்கள் வாங்குகின்றனர். நகரத்திலிருந்து 10, 12 மைல் போய் தூக்கு 1-6-0 க்கு வாங்கிவரும் பாதசாரிகளைத் தினசரி பார்க்கலாம்.

நகரத்தில், 37 கடைகளில் நாம் கணக்கெடுத்தோம். பதிவான கார்டுகள் 1719. ஒரு மாதத்துக்கு வேண்டிய விறகு 1406 டன்கள். அக்டோபரில் கிடைத்தது 332 டன்கள்தான். தொழிலாளிகள் வசிக்கும் பகுதியிலுள்ள கடைகளுக்கு விறகு வந்து $1\frac{1}{2}$ மாதமாகிறது!

உடைத்த விறகு (56 ராத்தல்) 10 அணு நிர்ணயப்படி. ஆனல் உடைத்ததோ உடைக்காததோ, 50 ராத்தல் விறகு 1-4-0, 1-6-0 க்குத்தான் கிடைக்கிறது. இந்த லட்சணத்திலே ஸ்பெஷல் பெர்மிட்டுகள் வேறு; ஆபீஸர்களுக்கு, வரும் விறகில் பொறுக்கி எடுத்தது போக, மிச்சம்தான் இதாருக்கு.

### நம் யோசனை

இந்த நெருக்கடி தீர பொதுமக்களும் அரசியல் கட்சிகளும் முன்வர வேண்டும். போன வருடத்தைப் போல சர்வகட்சிகளும் பணியாற்றல் அவசியம்.

- மில்கள், ஹோட்டல்கள், சாயப் பட்டரைகள் ஆகியவைகளுக்கு தேவையான விறகை வெளிஜில்லாக்களிலிருந்து கொண்டுவர வேண்டும்,
- கூப்புகளிலிருந்தும் பட்டாக் காடுகளிலிருந்தும் வரும் விறகை சர்க்கார் மத்ய டிப்போவில் சேகரிக்க வேண்டும். சில்லரை கடைகளுக்கு முறைப்படி வினியோகித்து அக்கடைகள் வினியோகிக்க வேண்டிய தெருக்களை நிர்ணயிக்க வேண்டும். விசேஷ சலுகைகள் காட்டுது நிறுத்தப்பட வேண்டும். சீக்கிரமே விறகு ரேஷனிங் அமுலுக்கு வருவது அவசியம்.

இக்கோரிக்கைகளுக்காக சர்வ கட்சி கிளர்ச்சி உடனடி தேவை.

# கைத்தறிகளுக்கு கரையான்

## நூலுக்கு "மங்கம்ம" காணிக்கை: நெசவாளர் பட்டினி

நாட்டிலோ துணிப்பஞ்சம். காலமோ பனிக்காலம் உடுப்பதற்கு உடையின்றி பரிதவிக்கும் பாமரமக்கள் பலர்.

தமிழ்நாட்டில் நாட்டுத் துணி வாங்கிக் கட்டிவந்தவர்கள் பல்லாயிரக் கணக்கானவர்கள். அந்தத்துணியை நெய்துவந்த கைத்தறிகள் பல்லாயிரம். 1928ல் மட்டும் 2,20,000 தறிகள் இம்மாகாணத்தில் இருந்ததாகச் சர்க்கார் கணக்குக் கூறுகின்றது. 14 ஜில்லாக்களில் 10,000 க்கு மேல் தறிகள் இருக்கின்றன.

கைத்தறி நெசவாளிகள், அவர்களுடைய பெண்டுபிள்ளைகள் இந்தத் தொழிலால் ஜீவித்துவந்தவர்கள் 10 லக்ஷத்துக்குக் குறைவில்லை. மாகாண ஜனத்தொகையிலும் சரி வாழ்க்கையிலும் சரி கைத்தறி நெசவாளர்கள் ஒரு விசேஷப் பகுதி.

### கைத்தறி நெசவே அதிகம்

1931 ஸென்ஸஸ் கணக்குப்படி இந்த நாட்டிலுள்ள பவர் தறிகளில் உற்பத்தியாகும் துணிமணியைப் போல் 5 மடங்கு அதிகப்படியான கைத்தறிகளால் உற்பத்திசெய்யப்பட்டதாகக் கூறுகிறது. டெக்ஸ்டைல் கண்ட்ரோல்மெண்டு அதிகாரிகள் இந்த யுத்தத்திற்குமுன் 500 கோடி கெஜத் துணியில் 150 கோடி கெஜம் கைத்தறிகளால் உற்பத்திசெய்யப்பட்டதாகத்தான் கூறுகின்றனர்.

மதுரைச் சேலையென்று நம்முடைய மாதர்கள் கோருவது உண்டு. சேலம் வேஷ்டிகளென்று ஆண்கள் விரும்புவதுண்டு. அதுமாதிரி தமிழ் நாட்டில் பற்பலவிடங்களின் கைத்தறித் துணிகள் பெயர்போனவை.

### சோதனைக்காலம்

இந்தக் கைத்தறி நெசவுக்கு சோதனைகாலம் ஏற்பட்டுவிட்டது. போதிய நூல் கிடைப்பதில்லை. கஜகர்ணம் போட்டாலும் போதிய அளவு கிடைப்பதில்லை. பல குடும்பங்கள் பரம்பரையாகப் பார்த்துவந்த இந்தத்தொழிலைவிட்டு நாடோடிகளாகிவருகின்றன. உதாரணமாக காரைக்குடியிலிருந்து 1000 நெசவாளர்கள் சேலத்துக்குப் புறப்பட்டனர்.

"அக்கரைக்கு இக்கரை பச்சை' என்ற கதைதான். சேலத்தில் போய்ப்பார்த்தாலும் அதே கதைதான். அருப்புக்கோட்டை சின்னனப்பட்டிபோன்ற விடங்களிலிருந்து காரைக்குடிக்கு சில குடும்பங்கள் வந்தனவாம். எல்லாவிடங்களிலும் ஒரே கதைதான்: நூல் இல்லை. தறிகள் கரையானரித்துப் போய்க் கொண்டிருக்கின்றன. தறியை ஓட்டியவர்களை வறுமை அறித்துத் தின்றுகொண்டிருக்கின்றது. இதில் உற்பத்தியான துணியை வாங்கிக் கட்டிவந்தவர்கள் உடையின்றி பனிக்கும் குளிருக்கும் இரையாகிக் கொண்டிருக்கின்றனர்.

தமிழ் நாடெங்கும் இப்பிரச்னை முற்றிவிட்டது. காஞ்சிபுரம், சேலம், கோவை, ஈரோடு, மதுரை, கரூர், காரைக்குடி, அருப்புக்கோட்டை, திருநெல்வேலி, அம்பாசமுத்திரம் எத்தனையோவிடங்களிலிருந்து ஒரே முகமாகக் கிளர்ச்சி ஏற்பட்டுள்ளது. எல்லாவிடங்களிலிருந்தும் ஒரே கூக்குரல்தான். "எங்கள் ஊருக்கு இத்தனைக் கட்டு நூல் வந்துகொண்டிருந்தது. இப்போது நூலைப் பார்ப்பதே அரிதாகிவிட்டது. கண்ட்ரோல் வந்தது. கூப்பன் அளிக்கப்பட்டது. அதன்படி நூல் கிடைக்கவில்லை. திட்டமிட்டதில் பாதிகூட கிடைக்கவில்லை." என்று எல்லா ஊர்களும் கூறுகின்றன.

### திட்டம் பிரயோஜனமில்லை

மாகாண நூல் கண்ட்ரோலர் திட்டம் போட்டுவிட்டார். ஜில்லா வாரியாக எத்தனைபேல்நூல்கொடுப்பது என்று திட்டம் போட்டிருக்கிறார். ஆனல் அந்த திட்டப்படி நூல் வினியோகம் செய்யப்படவில்லை.

காஞ்சிவரம் நிருபர் ஒருவர் கூறுகிறார் "இந்த ஜில்லாவுக்கு 1026 பேல்கள் மாதாமாதம் வரவேண்டும். ஆனல் மாதவாரியாக வந்த பேல்கள் செப்டம்பர் மாதம் 596, அக்டோபர் மாதம் $463\frac{1}{2}$, நவம்பர் மாதம் 389. ஆகவேவரவரமாமியார் கழுதைபோலானள்" என்ற கதையாக நூல் சரிவர வருவதில்லை. நாளுக்குநாள் குறைந்துகொண்டே போகின்றது."

தறிகள் சில 40ம் நெம்பர் நூலை உபயோகிக்கின்றன. சில 20ம் நெம்பர் நூலை உபயோகிக்கின்றன. இந்தமாதிரி வெவ்வேறு ரகம் நூல்கள் வினியோகத்தில் அந்தந்த ஊரிலுள்ள தறிகளுக்குத் தகுந்த நெம்பர் நூல் தரப்படுவதில்லை. உதாரணமாக அருப்புக்கோட்டையிலுள்ள

(4-ம் பக்கம் பார்க்க)

# மத்திய கமிட்டியும் மகாநாடும்!

## இரு ரயில்வேக்களும் சந்திக்கின்றன!

கடந்தவார இறுதியில் அதாவது 9, 10, 11 தேதிகளில், பெரம்பூரில் 60 ஆயிரம் எம். எஸ். எம். ரயில்வே தொழிலாளர்களின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு மகாநாடு நடைபெற்றது. அதேசமயத்தில் தாம்பரத்தில் 40 ஆயிரம் தென்னிந்திய ரயில்வே தொழிலாளர்களின் பிரதிநிதிகளடங்கிய மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நிகழ்ந்தது. இரண்டு மூன்று தினங்களும் பெரம்பூரிலும், தாம்பரத்திலும் பெரிய விழாவை ஒத்திருந்தது. பொதுக் கூட்டங்களும், ஊர்வலங்களும் நடைபெற்றன.

### மாகாணத்தின் முதுகெலும்பு

எம். எஸ். எம். ரெயில்வே நமது மாகாணத்தின் வடபாதி பூராவும் செல்லுகின்றது. தென்னிந்திய ரெயில்வே தெற்கு பிரதேசம், (மலையாளம் உள்பட) பூராவும் செல்லுவது. இந்த இரண்டு ரெயில்வேக்களும் சென்னை நகரத்தில் கூடுகின்றன. இந்த இரண்டு ரெயில்வேக்களிலும் மொத்தம் ஒரு லக்ஷம் தொழிலாளர்கள் பணியாற்றுகிறார்கள். இவர்களின் சேவைதான் நமது மாகாணமக்களின் வாழ்விற்கு முதுகெலும்பு. நாம் வாங்கும் ஒண்ணரை அங்குல டிக்கெட்டு அல்ல ஊர்போய் சேர்ப்பது. பல்குச்சியிலிருந்து விறகுவரையிலும், இன்னும் உண்ணும் உணவும் உடுக்கும் உடையும் சென்னையில் வாழும் 11 லக்ஷம் மக்களுக்கும் கொண்டு வந்து சேர்ப்பவர்களும் இந்தரெயில்வேத் தொழிலாளர்கள்தான். இவ்வளவு முக்கியம் வாய்ந்த ரெயில்வே தொழிலாளர்கள், இன்று தேசத்திலிருக்கும் அரசியல் பொருளாதார நெருக்கடிகளைத் தீர்க்க என்ன செய்கிறார்கள், என்ன கூறுகிறார்கள் என்பதை பொதுமக்கள் கவனிக்க வேண்டும். அவர்களது குறைகள் கணக்கி லடங்காது. பஞ்சப்படி, சம்பள விகிதம், வீட்டுவசதி முதலிய விஷயங்களில் அவர்களது கோரிக்கைகளை ரயில்வே போர்டு சரியானபடி பூர்த்திசெய்யவில்லை.

### தேசபக்தர்கள்

தங்கள் குறைகளை நிவர்த்தித்துக் கொள்வதற்காக ரெயில்வேத்தொழிலாளர்கள் ஒரு வேலை நிறுத்தத்தில் இறங்கினால் என்ன ஆகுமென்பதை சற்று சிந்தனைசெய்து பார்க்கவேண்டும். தங்கள் குறைகளைப்பற்றி மட்டும் ஆலோசிக்க அல்ல அவர்கள் கூடியது. போக்குவரத்திலுள்ள நெருக்கடியைத் தீர்த்து மக்களுக்கு தாங்கள் செய்யவேண்டிய சேவையைத் திறம்பட செய்ய திட்டம் வகுப்பது தங்கள் கடமையாகமேற்கொண்டுள்ளனர். தங்கள் குறைகள் தீர தேசத்திலேயே அரசியல் நெருக்கடி தீரவேண்டு மென்கின்றனர். காங்கிரஸ்-லீக் ஒற்றுமையின் மூலம் ஒரு தேசிய சர்க்கார் வேண்டுமென்கின்றனர்.

9-12-44 தேதி மாலை பெரம்பூரில் எம். எஸ். எம். ரயில்வேத் தொழிலாளர் மகாநாடு ஆரம்பமாயிற்று. 12 கிளைச் சங்கங்களிலிருந்தும் நூற்றுக் கணக்கான பிரதிநிதிகள் வந்திருந்தனர். பார்வையாளர்கள் பெண்கள் உள்பட பலர் வந்திருந்தனர். ஆயிரக்கணக்கில் உள்ளூர் தொழிலாளரும் பொதுமக்களும் வந்திருந்தனர். தாம்பரத்தில் அன்று நடைபெற்ற தென்னிந்திய ரெயில்வேத் தொழிற்சங்கத்தின் மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்திற்கு 33 கிளைச் சங்கங்களிலிருந்தும் வந்திருந்த, பிரதிநிதிகள் செந்தொண்டர்கள், பெண்கள் அனைவரும் அணிவகுத்துச் சென்று மகாநாட்டில் கலந்துகொண்டது மிக முக்கியமானது. இரண்டு ரயில்வேக்களும் ஒன்றாக இணைக்கப்படுவதற்கு முன்பே தேசபக்தி இரண்டு ரயில்வேயிலுள்ள தொழிலாளர்களையும் ஒன்றுபடுத்தி விட்டது.

### "ரயில் நடத்துவது நாம்"

பெரம்பூர், தென்னாட்டின் ரெயில்வேத் தொழிற் சங்க இயக்கத்திற்கு பிறப்பிடம். பெரம்பூர் ரெயில்வேத் தொழிலாளர், தாங்கள் ஈன்றெடுத்த இயக்கம் புதுத் தோற்றத்துடன் தங்களுடைய கிளைச் சங்கங்களிலும் சகோதர ரெயில்வேயான தென்னிந்திய ரெயில்வேயிலும் வளர்ந்து தனக்குத் துணையாக வந்து நிற்பதை நேரில் பார்த்த பெரம்பூர் ரெயில்வேத் தொழிலாளருக்கு பெருமையும், புது நம்பிக்கையும், உற்சாகமும் பிறந்தது.

செங்கொடி யேற்றியவர் தோழர் ஜே.பி. புருஷோத்தம். இவர் S. I. R. தொழிற் சங்கத்தின் தலைவர். இளைஞர்தான். முதியோர்கள் பார்த்து பிரமிக்கத்தக்க முறையில் செங்கொடியைப் பற்றியும், இன்றைய

**எம். கல்யாணசுந்தரம்**

தேசிய சர்வ தேசிய நிலைமையைப் பற்றியும் பேசி, ரெயில்வேத் தொழிலாளரின் கடமை இன்று போக்குவரத்தை திறம்பட நடத்தவேண்டும்; வாகன் உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; கரி சேமிக்க வேண்டும். இப்படியே சொல்லிக் கொண்டே போய் "இந்த ரெயில்வேயை நடத்துவது ஜெனரல் மானேஜர் அல்ல, நாம்தான்" என்ற நம் பொறுப்பை உணர வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். இவர் ஒரு ரெயில்வே தொழிலாளி என்பதை அறிந்த அனைவரும் பெருமை யடைந்தனர்.

### காங்கிரஸ்-லீக் ஒற்றுமை

வரவேற்பு கமிட்டித் தலைவர் ருத்ர குப்புசாமி நாயக்கர் அவர்கள் தேசத்திலிருக்கும் பஞ்சம், பட்டினி போன்ற நெருக்கடி தீர காங்கிரஸ் லீக் ஒற்றுமையும் தேசிய சர்க்காரின் அவசியத்தையும் வற்புறுத்தி பேசினார். பெரம்பூர் வாகன் ஷாப்பில் வாகன் உற்பத்தி தினமொன்று 4 லிருந்து 10 ஆக அதிகரித்திருப்பதை பெருமையுடன் அறிவித்தார்.

ருத்ர குப்புசாமி நாயக்கர்

பின்னர் சங்கத் தலைவர் ஸ்ரீ S. குருசாமி ரயில்வே போர்டின் போக்கை கண்டித்துப் பேசினார். தொழிலாளர்களின் உற்பத்தி பெருக்கு சேவையையும் பாராட்டினார்.

மகாநாட்டிற்கு வாழ்த்துகள் பலர் கூறினர். சென்னை மேயர் ஸ்ரீ ராதாகிருஷ்ணப் பிள்ளை விஜயம் செய்து வாழ்த்துக் கூறியது தொழிலாளர்களை சந்தோஷப் படுத்தியது. ரெயில்வேத் தொழிலாளர்களது சேவையை மேயர் போன்றவர்கள் பாராட்டுவதை, ரயில்வே நிர்வாகம் கொடுக்கும் சம்பளத்தைக் காட்டிலும் மதிப்புடைய செல்வமாக தொழிலாளர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள். ஆனால் அத்தகைய வார்த்தை ஒன்றும் மேயர் பேசாதது பலருக்கு ஏமாற்ற மளித்திருக்கும்.

மாகாண தொழிற் சங்க காங்கிரஸின் சார்பில் தோழர் பாலச்சந்திர மேனன் வாழ்த்துக் கூறினார். ஆந்திர விவசாயிகள் தலைவர் தோழர் பி. சுந்தரைய்யா ரெயில்வேத் தொழிலாளர்களின் சேவையைப் பாராட்டிப் பேசினார். ஆந்திர விவசாயிகள் தங்கள் வாழ்த்துகளை வார்த்தைகளோடு மட்டும் நிறுத்தி விடவில்லை. சுமார் 300 ரூபாய் பெறுமானமுள்ள காய் கரிகளும் அனுப்பி வைத்துள்ளனர். உண்மையான விவசாயிகள் தொழிலாளிகள் ஒற்றுமை இது.

தென்னிந்திய ரெயில்வேத் தொழிலாளர்களின் சார்பில் உபதலைவர் ஸ்ரீ வெங்கடசுப்ரமணியமும் (ஸ்டேஷன்மாஸ்டர்) தோழர் K. T. ராஜுவும் பேசினார்கள். அந்த மகாநாட்டிலேயே மிக உற்சாகமளித்தது தோழர் ராஜுவின் பேச்சுதான். அரசியல் நிலைமை மாறினால்தான் தொழிலாளி விமோசனமடைய முடியுமென்பதை அழுத்தமாகக் கூறி, இரண்டு ரெயில்வேயிலுள்ள தொழிலாளர்கள் ஒன்றுபடுவதை டிகால்-ஸ்டாலின் சந்திப்பிற்கு ஒப்பிட்டு, நம் குறைகள் தீருவதோடு நம் நாட்டின் சுதந்திரத்திற்காகவும் உழைப்போமென்று கூறிமுடித்தார்.

இவர் ரெயில்வேயில் தினம் பன்னிரெண்டணா சம்பளம் பெறும் பிட்டர் என்றறிந்ததும் ஒவ்வொரு ரயில்வேத் தொழிலாளியும் தானே பேசியதாகப் பெருமைபட்டிருப்பார்கள். ராஜுவைப்போன்று நூற்றுக்கணக்கான மணிகள் ரெயில்வேயில் வேலையிலமர்ந்திருக்கலாம். இத்தகைய மணிகளை ஈன்றெடுத்துள்ள ரெயில்வேத் தொழிலாளர்களை அடக்கி நசுக்க ரெயில்வே நிர்வாகத்தினால் அதிக நாளைக்கு முடியாது.

### சேவையும் தீர்மானங்களும்

தொடர்ந்து 10, 11 தேதிகளிலும் மகாநாடு நடைபெற்றது. காரியதரிசி தோழர் K. L. நரசிம்ஹம் கடந்த ஒருவருடத்தில் 19,000 அங்கத்தினர்கள்கொண்ட சங்கமாக வளர்ந்துள்ள வரலாற்றையும், குண்டக்கல், பெஜவாடா, பெரம்பூர் முதலிய கிளைகளில் தொழிலாளர்கள் உற்பத்தியை அதிகரிக்கவும் கரிசிக்கனத்திற்கும் எடுத்துள்ள முயற்சிகளைப் பாராட்டியும், இன்னும் சங்கம் அடைந்துள்ள வெற்றிகளை விளக்கியும், ஒரு அறிக்கையை சமர்ப்பித்தார். பின்னர் பல தீர்மானங்கள் நிறைவேறின. 36 ரூபாய்க்கு குறைந்த சம்பள விகிதம் இருக்கக்கூடாதென ஒரு தீர்மானம் கோருகிறது. பஞ்சப்படி ராவ் கமிட்டி சிபார்சுப்படியாவது அளிக்கப்படவேண்டுமென்று மற்றொரு தீர்மானம் கோருகிறது. காங்கிரஸ்-லீக் ஒற்றுமை வேண்டுமென்று கோரியும், அந்த அடிப்படையில் தேசிய சர்க்கார் அமைக்கவேண்டுமென்று கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸைப் பாராட்டியும், அதன் தலைவர் தோழர் டாங்கே இந்திய சுதந்திரத்திற்காக பிரிட்டனில் செய்துவரும் சேவையைப் பாராட்டியும் தீர்மானங்கள் நிறைவேறியுள்ளன.

இன்னுமொரு விஷயத்தைக் குறிப்பிடாமல்போனால் இந்தக் கட்டுரை பூர்த்தியாகாது. வரவேற்புக் கமிட்டியாரின் ஏற்பாடுகளையல்ல நான் குறிப்பிடுவது. அவர்களது சேவையை சிலவரிகளில் பாராட்டிவிடுவது சுலபமல்ல. தனிக் கட்டுரைவேண்டும். பின் எது? கலகக் கும்பல் அடைந்த தோல்வியைத்தான் குறிப்பிட விரும்புகின்றேன். இந்தக் கும்பலின் 'தலைவர்' ஜி. கிருஷ்ணமூர்த்தி M. L. A. 13,000 ரூபா கோஷ்டியின் சென்னை பிரதிநிதி. ரெயில்வேயில் ஸ்டாப் வார்டன் உத்தியோகம். தொழிலாளர் சங்கத்திலும் தலைவர் பதவி வேண்டுமாம். தன்னைத்தானே பிரரேபித்துக்கொண்டு ஸ்ரீ குருசாமியுடன் போட்டியிட்டார். படுதோல்வியடைந்தார். கைக்கூலிபெற்று சங்கத்தை பிளவுபடுத்தும் கைங்கரியத்தை செய்யும் கும்பலை, ஒதுக்கித் தூவென்று தள்ளினர் எம்.எஸ்.எம். ரெயில்வேத் தொழிலாளர்கள். அவர்களது சங்கம் வெற்றி பெறுக! ஒற்றுமை ஓங்குக!

### புதுவருட நிர்வாகிகள்

ஸ்ரீ S. குருசாமி
தலைவர்.

சீனிவாசலு நாயுடு (பெரம்பூர்)
அப்துல்லா (குண்டக்கல்)
உபதலைவர்கள்.

K. L. நரசிம்ஹம் (கம்யூனிஸ்டு)
பொதுக்காரியதரிசி.

தேவசுந்தரம் (பெரம்பூர்)
நடராஜன் (பெரம்பூர்)
உதவிக்காரியதரிசிகள்.

பாலகிருஷ்ணன்
பொக்கிஷதார்.

குடியாத்தம்

# செய்யாத குற்றத்துக்கு குறைந்த சம்பள தண்டனையா?

## மன்னிப்பும் கேட்கவேண்டுமாம்!

குடியாத்தம் நெசவுத் தொழிலாளர் சங்க காரியதரிசி, எம் கண்ணன். அவர் காந்தி ஜெயந்தி கொண்டாட வேண்டுமென்று 10-10-44-ல் லீவு வேண்டுமென்று மானேஜ்மெண்டுக்கு எழுதினர். இதற்காக அரஸ்டு செய்யப்பட்டு இவர் 14 நாள் ஜெயிலில் வைக்கப்பட்டிருந்ததும், மானேஜ்மெண்டு வேலையை விட்டு நீக்கியதும் 9-11-44 ஜனசக்தியில் (பக்கம் 4) வெளியிட்டிருந்தோம்.

7-12-44 அன்று கலெக்டர் குடியாத்தம் சென்று தாசில்தார் ஆபீஸில் கண்ணனையும் மானேஜ்மெண்டையும் வரவழைத்து, விசாரித்தார். முழு விபரமும் கீழே தருகிறோம்.

* * *

சப் கலெக்டர்: சங்கத்தின் காரியதரிசி நீங்கள் தானா?

காரியதரிசி: ஆமாம்.

சப் கலெக்: சங்கத்தில் மெம்பர்கள் எவ்வளவு? ஒவ்வொரு மெம்பருக்கும், சந்தா எவ்வளவு? வரும்படி எவ்வளவு? என்ன சிலவுகள் செய்கிறீர்கள்?

காரிய: 500 மெம்பர்கள். சுமார் ரூ. 60-0-0 வரும்படி. தபால் சிலவு, டிராவலிங் சிலவு, வாடகைச் சிலவு, அச்சுக்கூலி எல்லாம் சேர்த்து மாதம் 40 ரூபாய் சிலவாகிறது.

சப் கலெக்: மிகுதி பணம் என்ன செய்கிறீர்கள்.

காரிய: பேங்கில் போட்டு வைக்கப்படுகிறது.

சப் கலெக்: உங்கள் தலைவர்யார்?

காரிய: D. R. கோபாலன்.

சப் கலெக்: சிகப்பு மையில் அச்சடித்திருக்கிற சின்னம் கம்யூனிஸ்டு கொடியா?

காரிய: அது தெரியாது.

சப் கலெக்: பிறகு அதன் விவரம் என்ன?

காரிய: தொழிலாளர்களுடைய ஆயுதங்கள்; அறுவாள் விவசாயிக்கு முக்கியம், தொழிலாளர்களுக்கு சுத்தி முக்கியம். இரு ஆயுதங்கள் சேர்ந்தால்தான் உற்பத்தியும், பல காரியங்களும் முடியும். அதை மதித்தே எங்களுடைய லெட்டர் பேப்பரில் அச்சடித்திருக்கிறோம்.

சப் கலெக்: உனக்கு வேறுவேலை தெரியுமா?

காரிய: தெரியாது.

சப் கலெக்: நீ சாப்பாட்டிற்கு என்ன செய்கிறாய்?

காரிய: ஒரு வேளை சாப்பிட்டும், சாப்பிடாததுமாய் இருக்கிறேன். நண்பர்கள் உதவியால் சாப்பிடுகிறேன்.

சப் கலெக்: சரி. உனக்கு வேலை கொடுப்பதில் ஒரு முடிவு கட்டியிருக்கிறோம்.

நீ செய்தது தவறு என்று ஒத்துக்கொண்டு மானேஜ் மெண்டிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும். 6 மாதம் வரையில் ரூ. 14-0-0 சம்பளத்தில் வேலை செய்யவேண்டும். பிறகு பழைய சம்பளத்தில் வேலை கொடுக்கப்படும்.

காரிய: என்பேரில் என்ன தவறு?

சப் கலெக்: அதெல்லாம் சொல்ல முடியாது. **நீ காந்தி ஜெயந்தி கொண்டாட வேண்டும், என்று கேட்டதெல்லாம் தவறுதான்.** உனக்கு எழுதிக் கொடுத்து விட்டு வேலைக்குபோக இஷ்டமா? இஷ்டமில்லையா? என்று சொல்லவேண்டும் என்று கேட்டார்.

காரிய: தாங்கள் என் பேரில் என்ன குற்றம் என்று சொல்லாமல் குறைந்த சம்பளத்தில் வேலையை ஒத்துக்கொள்ளச் செய்வது நியாயமில்லை. குற்றமில்லாதபொழுது 14 ரூபாய்க்கு 6 மாதம் வேலை செய் என்று சொல்லலாமா? நான் இந்த நிபந்தனையில் வேலை ஒப்புக்கொள்ள முடியாது.

சப் கலெக்: நீ போகலாம்.

மானேஜிங் டைரக்டர்: சங்கத்திலே 24 பேர்தான் இருக்கிறார்கள். இந்த ஆள், மில்லில் மேஸ்திரி வேலை கொடுக்கவில்லை என்று (சீனியாரிடி) கிளர்ச்சி செய்துகொண்டிருக்கிறான் மானேஜர் ஒழிக! ஷண்முக முதலியார் ஒழிக!! என்று சொல்லுகிறான். சங்கத்தில் யாரும் இல்லைங்க" என்று தெரிவித்தார்.

சப் கலெக்: "அதெல்லாம் நான் கேட்க வில்லை. மில் தொழிலாளர்கள் 517 பேர் கையெழுத்திட்டிருக்கிறார்கள். நீங்கள்சொல்வது பொய்"

தவிரவும், குடியாத்தம் முனிசிபல் சேர்மன் M.V. துரைசாமி முதலியார் "மில் மானேஜ்மெண்டார் செய்திருப்பது சரியல்ல என்று நான் விசாரித்ததில் எனக்கு தெரிய வருகிறது. டிஸ்மிஸ் செய்திருக்கிறதைப்பற்றி தொழிலாளர்களிடத்திலே வெகு குழப்பமாக இருக்கிறது; சர்க்கார் உடனே தலையிட்டு விசாரணைசெய்து டிஸ்மிஸ் செய்த நபர்களை வேலைக்கு சேர்த்துக் கொள்ள வேண்டுமெனவும், தொழிலாளர் சங்கத்தார் இன்றைய நிலைமையில் வெகு ஒழுங்காகவும் நியாயமாகவும் அவர்களுடைய குறைகளை தீர்த்துக்கொள்ளவேண்டுகிறார்கள். ஆகையால் லேபர் கமிஷனர் தலையிட்டு உடனே இந்த பிரச்னையை தீர்த்துவைக்க கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று லேபர் கமிஷனருக்கும், கலெக்டருக்கும் ரிப்போர்ட்டு அனுப்பியிருக்கிறார்.

"பொதுஜனங்களிடத்தில் 2000 கையெழுத்துகள் வாங்கிவிட்டோம். இதுவரையில் 2500 பேர் வரையில் நேரில் சந்தித்து, நம்முடைய கொள்கையை விவரித்துச் சொல்லி மானேஜ்மெண்டு செய்த காரியங்களையும் சொல்லி விளங்க வைக்கிறோம். இந்த மாதம் 600 பேர் சங்கத்தில் சேர்க்க முயற்சி செய்து கொண்டிருக்கின்றார்கள் நம் தோழர்கள்" என்று கண்ணன் அறிவித்திருக்கிறார்.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

18,000 தறிகளில் மூன்றில் இரண்டு பாகம் 40 நெம்பர் நூல் தறிகள். இதற்கு வேண்டியதில் பாதிதான் நூல் கிடைக்கின்றதாம்.

### கள்ளமார்க்கெட் மங்கம்மா?

நூல் பஞ்சம் ஏற்பட்டதில், ஆயிரக்கணக்கான நெசவாளர்கள் நூலின்றித் தவிப்பதைக் கண்டால், கள்ளமார்க்கெட் கழுகுகள் சும்மா இருப்பார்களா? நூல் விநியோகம் லைசென்ஸ்தார்கள் மூலம் நெசவாளிகளுக்கு விற்காமல் லைசென்ஸ்தார் நூலை சொந்த லாபத்துக்கு வைத்துக்கொள்ளக் கூடாதென்றும் லைசென்ஸ்தார் தறிவைத்துக் கொள்ளக்கூடாது என்றும் ஒரு விதி. தறியை இன்னொருவர் பெயரால் வைத்துக்கொண்டு இந்த விதியைப் புறக்கணித்து விடுகின்றனர் வியாபாரிகள்.

காரைக்குடி, செட்டிநாட்டிலிருக்கிறது. பணம் குவிந்த குபேரர்களுடைய நாடு. இந்த ஊரிலிருந்து ஒரு நிருபர் கீழ்வரும் விலை நிலவரத்தைத் தருகிறார்.

| | கண்ட்ரோல் விலை. | கள்ளமார்க்கெட் விலை. |
|---|---|---|
| 40 நெ. வெள்ளை 10 ரா. கட்டுக்கு | 20-0-0 | ரூபா 24-0-0 |
| கறுப்பு ,, ,, | 27-8-0 | ,, 34-0-0 |
| கலர் ,, ,, | 29-0-0 | ,, 33-0-0 |

கண்ட்ரோல் விலையைக் காட்டிலும் அதிகமாக வாங்கக்கூடிய கொள்ளைக்கு அந்த ஊரில் "மங்கம்ம" என்று பெயராம். நூலின் கிருக்கிக்குத் தக்கபடி 'மங்கம்ம' அதிகரிக்கும்! பாண்டிய நாட்டில்தான், தருமத்துக்குப் பெயர்பெற்ற மங்கம்மா ராணியின் பெயரையும் இப்படி உபயோகப்படுத்தும் காலம் வந்துவிட்டது!!

தமிழ்நாட்டு சமூக வாழ்க்கையின் ஒரு பகுதி சிதைந்து சீரழிந்து போகாமலிருக்கவேண்டும். அதற்கு கைத்தறி நெசவாளர்களுக்குச்சரிவர நூல் விநியோகம் செய்தாகவேண்டும். மாகாணத்தில் நூல் உற்பத்திக்குக் குறைவில்லை. கோவையில் நெய்யப்படும் 100 நெ. நூல் புடவைகளுக்குக் கோவையிலேயே உற்பத்தியாகும் நூலைத்தரமுடியும்.

மாகாண கைத்தறிகளுக்கு 6½ கோடி பவுண்டு நூல் வேண்டியிருக்கும். மாகாண நூல் உற்பத்தி வெளி மாகாணங்களிலிருந்து எவ்வளவு கோட்டா சர்க்கார் கொண்டு வர முடியும்: இதை எப்படி விநியோகித்து கைத்தறி நெசவாளர்கள் கஷ்டத்தை நிவர்த்திக்கப்போகின்றனர் என்பதைத் தெளிவுபடுத்துவதற்கான கிளர்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

66-ம் ஆண்டு விழா

# மார்ஷல் ஸ்டாலின்

## சோவியத்திற்கும் உலகத்திற்கும் செய்த சேவை

[எஸ். ராமகிருஷ்ணன்]

டிஸம்பர் 21ந் தேதி ஸோவியத் காலண்டரில் ஒரு புனிதமானதினம். ஸ்டாலின் பிறந்ததினம் அது. இவ்வருடம் அவரது 66வது பிறந்தநாள். பிறப்பிலே தொழிலாளி. "பாட்டாளியின் முகம்; மேதையின் மூளை; சாதாரண போர்வீரனின் உடை" என்று பிரஞ்சு பேரறிஞர், பார்பூஸ் அவரை வர்ணிக்கிறார்.

புது உலக சிற்பி லெனின் சகா; புரட்சியின் தலைவன். 1918–22 தலையீடு யுத்தங்களை முறியடித்து ஸோவியத் குழந்தையை பாதுகாத்த தளபதி. தேசீய இன பிரச்னையை தீர்த்த வைத்தியன். ஐந்து வருட திட்டங்களின் கர்த்தா. ஸோவியத் அரசியல் அமைப்பை ஆக்கியோன். இவ்வாறு அடுக்கிக்கொண்டே போகமுடியும் அவர் சாதனைகளைப் பற்றி. அவரைக்கேட்டால் "திட்டம் லெனினுடையது; நிறைவேற்றியது பொதுமக்கள்" என்று சொல்லுவார்.

"தலைவர்கள் வருவார்கள். போவார்கள் ஜனசமூகந்தான் சிரஞ்சீவியாய், அமரர்களாய் வாழ்வது" என்பது அவர் மணி வாக்கியம். ஜனசக்திதான் சரித்திரத்தின் சிற்பி என்பது அவர் கொள்கை.

இந்த சகாப்தத்தின் இணையற்ற கர்மவீரன் அவர்; ஜோடியில்லாத சிந்தனையாளர்; ஒப்புயர்வில்லாத தீர்க்கதரிசனம் படைத்தவர். இன்று நடக்கும் உலக வியாபகமான போரின் வெற்றிக்கு அவர் தலைமைக்கே பிரதம பங்கு உண்டு. அதனால்தான் ஸோவியத் சர்க்கார் அவருக்கு "வெற்றி வீரன்" என்ற பட்டம் சூட்டியிருக்கிறது.

மார்ஷல் ஸ்டாலினின் புரட்சி தினபிரசங்கம் (1944) அவர் பிரகடனங்களுக்கெல்லாம் கிரீடம் வைத்ததுபோலாகும். வெற்றிதின பிரசங்கம் அது. "உலகவிடுதலையின் உறுதுணைவன் ஸோவியத்" என்பதை குழந்தைகூட புரிந்துகொள்ளும்". நிரந்தரமான சமாதானம் செஞ்சேனையின் புனிதப்பணி" என்று அந்த கர்மவீரன் கூறும்போது யாரிடம்தான் நம்பிக்கை பிறக்காது?

### தனி இனத் தத்துவம்

தேசீயத்தில் இருவகை (1) தன் நாட்டை உள்ளன்புடன் நேசிப்பது போலவே பிறநாட்டாருக்கும் மதிப்புக் கொடுப்பது. மனிதசமூகம் ஒரு குடும்பமாய், சம அந்தஸ்தில் வாழ விழைவது. இன்னொன்று வெறி பிடித்த தேசீயம். தான்தான் உலகத்தை ஆளப்பிறந்தோம் என்ற மமதையில், தன் இனம் உயர்ந்த இனம் இதரரெல்லாம் கீழானவர்கள் என்ற போதையில் வளர்வது. இதைத்தான் "மிருகத்தனமான தேசீயம்" என்கிறார் ஸ்டாலின்.

"(கடவுளால்) பொறுக்கி எடுக்கப்பட்ட உயர்பிறவி என்று தன்னை அழைத்துக்கொள்ளும் ஜெர்மானியன் உலகமக்களின் வெறுப்புக்காளாகிவிட்டான்" என்கிறார் ஸ்டாலின்.

### அரசியல் தார்மீக தோல்வி

ஹிட்லர் தன்னுடைய உலக ஆதிக்க திட்டத்துக்கு ஆதாரமாக மேல்ஜாதிக் கொள்கையை தழுவிக் கொண்டான். அதே சமயத்தில் தன் பாராளும் உரிமையை அங்கீகரிக்கும் துணைவர்களும் வேண்டுமென்றான். அது எப்படி முடியும்? இழிந்தோன் என்று இகழப்படுவன் இகழும் கும்பலுடன் சேர்வானா?

இன்று சரித்திரம் அதை ருஜுப்படுத்திவிட்டது. ஹிட்லரின் தனி இனதத்துவத்தால், ஜெர்மனியே தனிமைப்பட்டுவிட்டது. சகல தேசங்களையும் அடக்கி ஆள திட்டமிட்ட ஜெர்மனி, அனைவருக்கும் அப்பால், தன்னந் தனியாய் நிற்கிறது. "போரில் ஹிட்லருக்கு சம்பவித்தது ராணுவத் தோல்வி மாத்திரமல்ல; அரசியல் தார்மீக தோல்வியும்கூட" என்கிறார் ஸ்டாலின்.

சகல தேசங்களுக்கும் சம உரிமைகள் உண்டு; சகல இனங்களும் சம அந்தஸ்தில் சகோதரர்கள்போல் வாழவேண்டும் என்ற தத்துவத்தின் அடிப்படையில் பிறந்தது பாஸிஸ்ட் எதிர்ப்பு முன்னணி. "இதர இனங்களெல்லாம் மட்டம்" எனக்கருதும் ஆதிக்க வெறி பிடித்த இன தத்துவத்தை எதிர்த்து போர் பேரிகை கொட்டியது. இறுதியில் வெற்றி சங்கும் ஒலிக்கிறது.

"சகல தேசங்களுக்கும் இனங்களுக்கும் சம உரிமைகள் உண்டு என்கிற தத்துவம் மிருகத்தனமான தேசீயம் என்ற கோட்பாட்டை எதிர்த்து பரிபூர்ண வெற்றி அடைந்துவிட்டது" என்கிறார் ஸ்டாலின்.

### சந்தர்ப்பம்

"சுதந்திரம், சமாதானம், முன்னேற்றம்" இவையே சோவியத் குறிக்கோள்கள். சுதந்திர உலகம் சமாதான மார்க்கத்தில் முன்னேற இந்த யுத்த வெற்றியால் ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. சந்தர்ப்பத்தை கிரஹித்து, சரித்திரத்தின் தேரை நடத்துவது உலகமக்கள் பொறுப்பு. அப்பொழுது இந்த

(6-ம் பக்கம் பார்க்க)

தமிழ் நாட்டில்

# காங்கிரஸ் பெயரால்

## போட்டி—பிளவு—பொய்ப் பிரசாரம்

கே. பாலதண்டாயுதம்

சென்னை, திருச்சி, மதுரை, ராமநாதபுரம், தஞ்சாவூர் முதலிய ஜில்லாக்களில் காங்கிரஸ் சங்கங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதிலிருந்து கம்யூனிஸ்டுகள், ராயிஸ்டுகள், ஆகஸ்டு தீர்மானத்தை எதிர்த்த காங்கிரஸ்காரர்கள், இன்றும் எதிர்ப்பவர்கள் விலக்கப்பட்டிருக்கின்றனர்.

இச்சங்கங்களை அமைப்பதில் முக்யபங்கு எடுத்துக்கொள்பவர்கள் தமிழ்நாட்டு காங்கிரஸ் தலைவர்களான ஸ்ரீமான் முத்துரங்க முதலியார், ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி, ஸ்ரீமதி அம்முசுவாமிநாதன் முதலியோர். சங்கங்களை அமைப்பதற்காககூட்டிய காங்கிரஸ் ஊழியர் கூட்டங்களுக்கு சென்னையில்பிரபல காங்கிரஸ் தலைவர்களான டாக்டர் பி. சுப்பராயன், ஸ்ரீமான்கள் ஜகன்னாத தாஸ், சிவஞான கிராமணி, தஞ்சாவூரில் ஸ்ரீமான் பூவாராகவன் போன்றவர்கள், திருச்சியில் டாக்டர் ராஜன் போன்றவர்களுக்கு அழைப்பு அனுப்பவில்லை. மதுரையில் பழுத்த காங்கிரஸ்வாதி ஸ்ரீமான் வைத்தியநாத அய்யர் அக்கூட்டத்திற்கு வரவில்லை.

### கம்யூனிஸ்டுகளை விலக்காதே

கூட்டத்திற்குச் சென்றிருந்தவர்கள் பலர், சென்னையில் ஸ்ரீமான் கே. பாஷ்யம் அய்யங்கார், திருச்சியில் ஸ்ரீமான்கள் எப். ஜி. நடேச அய்யர், எல். என். கோபாலசாமி, (ஹரிஜன சேவா சங்கக் காரியதரிசி) பொன்னம்பல கவுண்டர், மதுரையில் அப்துல் சத்தார் சாகேப் முதலியவர்கள் சங்கத்திலிருந்து கம்யூனிஸ்டுகளையும், சில காங்கிரஸ்காரர்களையும் விலக்குவதை எதிர்த்தனர். காங்கிரஸ் சங்க கர்த்தாக்களிடம் இருந்து திருப்தி யடையும்படியான பதில் கிடைக்கவில்லை.

### பொய்ப் பிரசாரம்

சங்கம் நிறுவும் கூட்டங்களில் காங்கிரஸ் சங்க வழிகாட்டிகளான தலைவர்கள் பேசும் பேச்சைக்கேட்டால் "நம் நாட்டுக்கு இப்படியும் துரதிருஷ்டம் வருமா" வென்று கேட்போருக்கு நெஞ்சுடையும். திருச்சிக் கூட்டத்தில் ஸ்ரீமான் முத்துரங்க முதலியார் 'கம்யூனிஸ்டுகள் காங்கிரஸை பாஸிஸ அனுதாப ஸ்தாபனம்' என்று சொல்வதாகக் கூசாமல் கூறினார். அவருக்குமேல் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி அம்மாள்! மதுரைக் கூட்டத்தில் "கம்யூனிஸ்டுகள் கவர்ன்மெண்டிடம் கொஞ்சிக் குலாவிக் கொண்டிருக்கின்றனர்; அதே சமயத்தில் தொழிற்சங்கங்களைக் கைப்பற்றி வருகின்றனர். காங்கிரஸையும் கைப்பற்ற முயற்சிக்கின்றனர்" என்று எண்ணாமல் பேசினார்கள். எல்லாக் கூட்டங்களிலும் இந்த ஒரு விஷயம் தான் பிரசங்கமாக பொழியப்பட்டது. இப்படி பொய் சொன்னால் பொதுஜனங்கள் இவர்களைப்பற்றி என்ன நினைப்பார்கள்? அதுதான் நமக்கு மனவேதனை யுண்டாக்குகிறது.

### "கார்டியன்" போற்றுகிறது

சென்னையிலிருந்து "கார்டியன்" என்ற கிறிஸ்தவ சமூகப் பத்திரிகை யொன்று எழுதுகிறது:—

"ஒன்றும் செய்ய முடியாத நிலைமையில் காங்கிரஸை வைத்திருந்த காலத்தில் கொள்கை வழுவாது தீவிரமாக தேசசுதந்திர கோரிக்கையை நிலைநாட்டிவந்த ஒரே கட்சி கம்யூனிஸ்டு கட்சி...... சென்ற இரண்டு வருஷ காலத்தில் தினசரித் தேவைகள், துணி, உணவு முதலியவை கிடைக்காமல் படுமோசமான நிலைமையில் ஜனங்கள் கஷ்டப்பட்டகாலத்தில் அவர்களை அணுகி அவர்களுக்கு சேவை செய்தவர்கள் கம்யூனிஸ்டுகள்."

தப்பித் தவறிஞாபக மறதியாகக் கூட உணவு விஷயமாக, அவர்கள் பிரசங்கங்களில் எதுவும் சொல்லி விடுவதில்லை.

### போட்டி! பிளவு!

மாணவர் தொழிலாளர், விவசாயிகளிடம்சென்று சேவை செய்வதாக பேச்சுகள் நடக்கின்றன. ஆனால் அதைப்பற்றி இச்சங்கங்கள் திட்டமொன்றும் வகுக்கவில்லை. ஸ்ரீமதி லக்ஷ்மிபதி தொழிலாளர் அரணில் செய்யும் முதல் வேலை ராயிஸ்டுகள் முதலிய சங்க விரோதிகளின் பேச்சைக் கேட்டுக்கொண்டு டிராம்வேத் தொழிலாளர் சங்கத்தை சீர்குலைப்பது. விவசாயிகள் சங்கக் கூட்ட மகாநாட்டில் பேச்செல்லாம் 'புரட்சி' கரமான கம்யூனிஸ்டு-எதிர்ப்பு. விவசாயிகள் பிரச்னைபற்றி பேச்சேயில்லை.

ஆனால் காங்கிரஸ்காரர்கள் எல்லோருமே ஸ்ரீமான் முத்துரங்க முதலியார், ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதியைப்போல்என்று, பொதுஜனங்கள் நினைத்துவிடக் கூடாது. தூத்துக்குடியில் காங்கிரஸ் ஊழியர்கள் கூடி, எல்லோருடனும் ஒத்துழைத்து நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதென முடிவு எடுத்திருக்கின்றனர். சென்னை முதல் சர்க்கிள் காங்கிரஸ் ஊழியர்கள் 6 மாதத்திற்கு திட்டமிட்டு சகலருடன் ஒத்துழைத்து நிர்மாணவேலையில் முனைகின்றனர். கோயமுத்தூரில் காங்கிரஸ்காரர்கள் ஸ்ரீமான் டி. எஸ். அவநாசிலிங்கத்தின் தலைமையில் உணவுத் திட்டம் ஒன்று உருப்படியாக தயாரித்து எல்லோருடன் சேர்ந்து வேலை செய்ய தீர்மானித்திருப்பதாக பத்திரிகையில் செய்தி வெளியாயிருக்கிறது. அம்பை தாலுக்கா காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி கோமதி சங்கர தீக்ஷதர் "திருநெல்வேலியில் நாங்கள் கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைப்போம்" என்று உறுதி கூறுகிறார்.

பொது ஜனங்களின் கவனத்தை உணவுப் பிரச்னைக்குக் கவர்ந்து கள்ள மார்க்கெட்டை எதிர்த்துப் போராடும்படி ஸ்ரீமான் சிவஞான கிராமணி எழுதிய கட்டுரையை 3-ம் பக்கத்தில் படியுங்கள். தென்னாற்காடு ஜில்லா காங்கிரஸ் சங்க கன்வீனர் ஸ்ரீமான் விநாயகம் பிள்ளை, சர்க்காரின் கொள்முதல் திட்டம் வெற்றிபெற உபரி தான்யத்தைச் சர்க்காருக்கு விற்கவேண்டும் என்று வலியுறுத்துகிறார். காந்திஜியே காங்கிரஸ்காரர்கள் சர்க்கார் உணவுக் கவுன்ஸில்களில்சேர அனுமதி கொடுத்திருக்கிறார்.

இங்கிலையில் அரியலூரில் கூடும் காங்கிரஸ்காரர்கள் தங்கள் கடமைகளைச் செய்வார்களா?

# ★ தமிழ்த்தாய் : வீரத்தாய் ★

[ஜே. எம். கல்யாணம்]

நம் பழம் தமிழகம் பண்டைக் காலத்தில் திருவேங்கிடம் முதல் தென்குமரி வரை விரிந்து கிடந்தது. இப்பரந்த நிலப்பரப்பில் வீரம் செறிந்திருந்தது. மார்பில் மழுவேறி புண்ணான மருக்களை வீரர்கள் கௌரவமாகக் கருதினர். தங்கள் நாட்டைக் காக்கவேண்டி சமர்க்களம் சென்று, யானைகளை வீழ்த்தி, வெற்றிமாலை சூடி வீறுகொட்டி வீடுதிரும்பினர் எனப் பழம் கதைகள் கூறுகின்றன.

இவ்வீரர்களுக்கு இம்மகத்தான தேசபக்தியனலை மூட்டியது யார்? பிள்ளைகளைப் பெற்று, பேணி வளர்த்து போர்வீரர்களாக்கியது அக்காலத்து வீரத்தாய்மார்களல்லவா?

"தாயைப்போலப் பிள்ளை. நூலைப் போல சேலை" என்பது நம் மூதாதையர் வாக்கு.

### வீரத்தாயின் மனோநிலை

இவ்வாறாக வீரத்தமிழகத்துக்கு காரணமாயிருந்த வீரத் தாய்மார்களின் மனோநிலை அன்று எப்படியிருந்தது.

பொன்முடியார் என்னும் பெண்புலவர் புதல்வர்களின் கடமை பின்வருமாறு எனக் கூறுகிறார்.

"ஒளிறுவாள் அருஞ்சமர்முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல்
காளைக்குக் கடனே"

போர் அரங்கத்தில் ஒளிவீசுகின்ற வாளைச் சுழற்றி யானைகளை வெட்டி வீழ்த்தித் திரும்புவதே (காளைக்கு) வீரப்புதல்வரின் கடமை என்பதே இவ்வரிகளின் பொருள். வேறு கடன் இல்லை: நாட்டின் கடன்தான் தலையாயகடன் என அர்த்தம்பட 'கடனே' என்று அழுத்தம்திருத்தமாக இப்புலவர் கூறுகிறார்.

மற்றொரு பெண்புலவர் ஒரு வீரத் தாயாரைப்பற்றி கூறுவதைக் கேளுங்கள்: வயதோ முதிர்ந்துவிட்டது. மீனுண்ணும் நாரையின் நிறமொப்ப கூந்தல் வெண்மை யேறிவிட்டது. இவள் ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருக்கிறாள். ஏன்? பிள்ளை "களிறெறிந்து பட்டனன் என்னும் உவகை, ஈன்ற ஞான்றும் பெரிதே" யானதாலாம். பிள்ளை யுத்தகளத்தில் யானையை எதிர்த்து இறந்து போனான் என்ற செய்தியைக் கேட்டதும் பெற்றபொழுது உண்டான சந்தோஷத்திலும், அவன் வீரத்தைக் கேட்டபொழுது உவகை மேலிட்டதாம் இந்த வீரத்தாயுக்கு.

இதுபோன்ற பல உதாரணங்கள் கூறலாம். ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண்புலவர் ஒரு தாயின் வீரத்தைக் கண்டு "என் சிந்தை கெடுக" இவள் துணிவு அஞ்சத் தகுந்ததாகும் என்று வியக்கின்றார். அப்பேர்ப்பட்ட துணிவென்ன? இவள் தந்தை முன் ஒருநாள் யானையால் கொல்லப்பட்டான். கணவன் சமீபகாலத்தில்தான் எதிரியுடன் போராடி அவனையும் கொன்று தானும் மாண்டான். இன்று முரசொலி கேட்டு, சந்தோஷம் கொண்டு, பிள்ளையை அருகே அழைத்து, எண்ணெயிட்டுத் தலைவாரி வேலைக் கையில் கொடுத்து 'ஒருமகனல்லது இல்லோள், செருமுக நோக்கிச் செல்கஎன விட்டாள்". ஒரே மகனுடைய தாயின் வீரமிது. இதைக் கண்டே அப்புலவர் "கெடுக சிந்தை—கடிதிவள் துணிவே" என மலைத்தார்.

இவ்வீரம் அணைகடந்து வீராவேசமாகத் தோன்றியதுமுண்டு. தன் பிள்ளை சண்டையில் எறிந்த வேல் யானையின் மீது பாய்ந்தது. அதை மீட்கவகையறியாது வெறும் கையனாய் வீடுதிரும்பினான் பிள்ளை. இந்த அவக்கேடு தன் குடும்பத்துக்கு இதுவரை ஏற்பட்டதேயில்லையே என்று வருந்துகிறாள். இதுபோன்ற பிள்ளையைப் பெற்ற தன் வயிற்றை சபித்து கோபிக்கிறாள். "வாதுவல் வயிறே—வாதுவல் வயிறே......எம்மில் செய்யாப் பெரும்பழி செய்த கல்லாக் காளையை ஈன்ற வயிறே" எனப் புலம்புகிறாள்.

### தாலியிலும் வீரம்

இன்று தாலி யென்பது அடிமைச் சங்கிலியாக மாறிக் கிடக்கிறது. ஆணுக்கு பெண்மீதுள்ள ஆதிக்கத்துக்கு அறிகுறியாக நிற்கிறது. ஆனால் அன்றோ!

குறிஞ்சி என்ற நிலப்பரப்பில் வசித்த இளைஞர்கள் புலியை எய்து கொல்வர். அப்புலிகளின் பற்களை தங்கள் மனம் பிடித்த மங்கையரின் தந்தையருக்கு, தங்கள் வீரத்தின் சின்னமாகக் காட்டுவர். அம்மகளிரை மணம் செய்வர். அப்புலிப்பற்களை நாணில் கோற்று அவர்கள் கழுத்திலிடுவர். எனவே பெண்டிர் வீரரையே மதித்தனர் என்பது தெரியவருகிறது. நாளடைவில் அது வழக்கமாக மாறி இன்று தாலி இம்முறையில் நிற்கிறது.

போர்கோலம் கொண்டு சண்டைக்கு செல்லும் படைகளிலும் 'விறலியர்' என்ற பெண்கள் இருந்தார் என்றால் நம் வீரத்தாய்மார்களைப்பற்றி அதிகம் கூறவேண்டியதில்லை.

### வீரத்துடன் அறிவு!

வீரம் தனித்து நிற்பதல்ல—பேரறிவும், அத்துடன் தேங்கி நிற்கும். பண்டைத் தாய்மார்கள் கல்வியின் உச்சநிலையை யடைந்திருந்தனர். அநேக பெண்புலவர்கள் ஆணுக்கு நிகராக சபையேறி தங்கள் பாடல்களை அரங்கேற்றியிருக்கின்றனர். காவற் பெண்டு, பேய்மகள், இளவெயினி, ஒக்கூர் மாசாத்தியார், பூங்கணுருத்திரையார், பொன்முடியார், ஔவையார் முதலியோர் புறநானூற்றில் சில பாக்களை செய்துள்ளார்கள்.

இவ்வாறாக முன்னாளில் அறிவும் ஆற்றலும், வீரமும் ஒருங்கேமிருந்த தாய்மார்களைக் கொண்டு அரும்பெரும் செயல்களுக்கு நிலைக்களமாக நின்றது நம் தமிழகம். இதைக் கண்ட பாரதி "தமிழன் என்ற பெருமையோடு தலைநிமிர்ந்து நில்லடா" என்று கூறினதில் ஆச்சரியமில்லை.

### தமிழன் கடமை

இன்று அத்தாய்மார்கள் சமூகச் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு சீர்குன்றி செயலாற்ற வகையறியாது நடைப்பிணங்களாக நிற்கின்றனர். தொட்டிலாட்டும் கை, தீரர்களை ஆக்கும் கரம் எனும், பழம் பெருமுறை மங்கிக் கிடக்கின்றது. எனவே தமிழராகிய நம் கடன் அப்பண்டைகாலப் பெருமையை போற்றி, வளர்ப்பதாக வேண்டும்.

**யுத்தப் போக்கு** — **ஸி. எஸ். சுப்ரமணியம்**

# "விடுதலைப் பட்டாளம் உங்கள் எல்லையிலே"

## ஆஸ்டிரிய மக்களுக்கு மாஸ்கோ அளிக்கும் உறுதி

*"செஞ்சேனையின் தாக்குதலினல் ஏற்படும் ஆபத்து புடாபெஸ்டு நகரத்துக்கு மட்டுமில்லை. ஆஸ்டிரியாவிலும், செக்கோஸ்லாவாகியாவிலும் ஹிட்லருடைய போர்த்திட்டத்துக்கென்று கூப்ளை தயாரிக்கப்படும் பிரதேசங்களுக்கே ஆபத்து வந்துவிட்டது" என்று "ரெட் ஸ்டார்" பத்திரிகை எழுதுகிறது. அது எப்படி?*

ஹங்கேரியின் தலைநகர் புடாபெஸ்டு. தெற்கே டான்யூப் நதியைக் கடந்து அங்கரை நோக்கி மார்ஷல் டோல்புகின் படைகள் முன்னேறிவருகின்றன. டான்யூப் நதி புடாபெஸ்டுக்கு வடக்கிலிருந்து அந்நகரருகே பாய்ந்து தெற்கேவளைந்து செல்லுகின்றது. புடாபெஸ்டின் வடபாகத்தில் சுமார் 40 மைல் தூரத்தில் மார்ஷல் மாலினேவ்ஸ்கியின் படைகளும் டான்யூப் நதியைக் கடந்துவிட்டன.

இனி இந்த ஆறு ஒரு தற்காப்பு அணி என்று நாஜிகள் எண்ணிக்கொண்டிருக்க முடியாது. அதனல்தான் டான்யூப் நதியை வடக்கிலும் தெற்கிலும் சோவியத் படைகள் கடந்திருப்பது மிகவும் ராணுவ முக்கியத்வம் வாய்ந்த விஷயம்.

இந்த நதியைக் கடந்த பின்னர் மாலினேவ்ஸ்கியின் படைகளில் ஒரு பகுதி செக் எல்லையை நோக்கி விரைந்து செல்ல ஆரம்பித்துவிட்டன. ஸொரன்ஸ் என்ற முக்கியமான ரயில் ஸ்டேஷனைக் கைப்பற்றிவிட்டன. இன்னும் 30 நகரங்களிலிருந்து நாஜிகளை விரட்டிவிட்டன.

### கூண்டிலடைப்பட்ட கூட்டம்

நாஜிகள் தப்பியோட புடாபெஸ்டுக்கு வடமேற்காகச் செல்லும்பாதை ஒன்றுதான் பாக்கி. அதையும் துண்டித்து விட்டால் கூண்டிலடைபட்ட கூட்டம்தான் புடாபெஸ்டிலுள்ள நாஜி ஸைன்யம். அந்தப் பாதையை துண்டிப்பது இதோ, அதோ என்றிருக்கின்றது.

சோவியத் படைகள் ஆஸ்டிரிய எல்லைக்கு 30 மைல் தூரத்தில்தானிருக்கின்றன. "விடுதலைப் பட்டாளமான செஞ்சேவை, ஆஸ்டிரியாவின் எல்லையில் நிற்கின்றது. ப்ருஷ்ய காட்டுமிராண்டித்தனத்திலிருந்து விடுவித்துக்கொள்ள இதுவே சமயம். ஆஸ்டிரிய மக்களே! உங்கள் பக்கத்திலுள்ள சகல உதவி சக்திகளையும் பரிபூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்" என்று மாஸ்கோ ரேடியோ ஆஸ்டிரிய மக்களுக்கு ஒலிபரப்பியுள்ளது.

செக் எல்லையிலிருந்து 10 மைலில்தான் இருக்கின்றன. ஹங்கேரியாவில் உலோகச் செல்வம் நிறைந்த பிரதேசத்தை மீட்டு வருகின்றன. தலைநகரமான புடாபெஸ்டைமட்டும் நாஜி எஸ். எஸ். படைகள் எடுத்துக்கொண்டு, விடாப்பிடியாகப் போர் செய்து வருகின்றன.

கிழக்கு ஐரோப்பாவில் இன்னும் இரு முக்கியமான சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன.

### பொதுஜன வெற்றிகள்

பல்கேரியாவில் நாஜிகளுக்கு உதவிபுரிந்த பழைய ராணுவ 'வீரர்களை' பொதுஜனங்கள் கைது செய்து வைத்திருக்கின்றனர். அவர்களை விடுவித்து மீண்டும் தேசத்தின் ராணுவத்தில் அனுமதிப்பதற்கு ஒரு முயற்சி நடைபெற்றுவந்தது. இதன் விளையாக ஒரு அரசியல் நெருக்கடி ஏற்படும்போலிருந்தது. ஆனல் பல்கேரிய சர்க்கார் கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்யப் போவதில்லை என்று உறுதிமொழியளித்துவிட்டது.

ருமேனியாவில் யூதவேட்டைநடைபெற்று வந்தது. ஆண்டனெஸ்கு சர்க்கார்—நாஜிகளுக்கு ஆதரவாய் நின்ற கும்பல்—யூதர்களின் உரிமைகளைப் பறிக்கும் சட்டங்களை நிறைவேற்றியிருந்தது. யூதர்களின் சொத்துக்களை ஜப்தி செய்திருந்தது. இப்பொழுது அந்த நாடுவிடுதலையடைந்தபின்னர் ஏற்பட்டுள்ள சர்க்கார், அந்த சட்டங்களைரத்துசெய்துவிட்டனர். யூதர்களிடமிருந்து பறிக்கப்பட்ட சொத்துக்களைத் திரும்பத் தந்துவிட்டனர்.

### மேற்கே தேக்க நிலைமை

கிழக்கு ஐரோப்பிய நிலைமை இப்படியிருக்க மேற்கே ஜெர்மானிய எல்லைக்குள் நுழைந்து, நாஜி தற்காப்பு அரண்களைத் துளைப்பதற்கு பிரிட்டிஷ், அமெரிக்க பிரெஞ்சுப் படைகள் தீவிரமாகப் போர்செய்து வருகின்றன.

1914-18ல் நடந்த மகாயுத்தத்தில் "டிரெஞ்ச் வார்பேர்" நடந்துவந்தது. டிரெஞ்சு என்பது பூமி மட்டத்துக்கடியில் வெட்டப்படும் குழிகள். அதற்குள் நின்றுகொண்டு, வாழ்ந்துகொண்டு பீரங்கிப் பிரயோகமும், துப்பாக்கிப் பிரயோகமும் செய்து சண்டை நடந்தது. இந்தமாதிரி போர் நீண்டகாலம் நடைபெற்றது அதேபோல் இன்றைக்கு மேற்குப் போர்முனையில் 'பாதுகாப்பு' அரண்களில் அதிக முன்னேற்றத்தைக் காணமுடியாத போர் நடைபெறுகின்றதா என்று சில பத்திரிகைகள் கேட்க ஆரம்பித்துவிட்டன. ஏன்? "இன்றைக்கு பிரிட்டிஷ் இரண்டாம் படை 1000கெஜம் முன்னெறிற்று," "அமெரிக்க முதல் ராணுவம் 2000 கெஜ அகலமான முனையில் 1500 கெஜம் முன்னேறிற்று" என்றுதான் அறிக்கைகள் கூறுகின்றன.

நாஜிகள் சில எதிர்த்தாக்குதல்களைச் செய்து பார்த்திருக்கின்றன. குறிப்பாகப் போர்முனையின் தென்கோடியில் பிரெஞ்சுப்படைகளை எதிர்த்துத்தாக்கினர். எனினும் ஸார் பிரதேசத்தில் நேசப்படைகள் இன்னும் இடைவிடாது முயற்சிசெய்து, மெல்ல மெல்ல முன்னேறிக்கொண்டிருக்கின்றன.

### கம்பெனி டைரக்டர் கைது

பிரான்ஸ் தேசத்தின் சார்பில் மாஸ்கோ சென்ற டிகால் ஸோவியத் யூனியனுடைய ஒரு பரஸ்பர உதவி ஒப்பந்தம் கையொப்பமிட்டுவிட்டு வந்தார். பிரான்ஸ்தேசத்தில் நாஜிகளுடன் ஒத்துழைத்த பணக்காரக் கோஷ்டிகளுக்கெதிரான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன. "ஏர் டி பிரான்ஸ்" என்பதுமிகப்பெரிய ஆகாயவிமான உற்பத்திக் கம்பெனி. நாஜிகளுக்கு விமானங்களைத் தயாரித்து வந்தது இக்கம்பெனி. அவ்வாறு செய்து வந்த கம்பெனி டைரக்டர் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### நம் நாட்டுக்கருகில்

கொஞ்சநாட்களாக நாம் நமது நாட்டுக்கருகில் ஒரு எதிரியை எதிர்த்துப் போர் நடந்து வருகின்றது என்பதை மறந்திருந்தோம். ஆனல் நம்முடைய சீன சகோதரர்கள் அப்படி சும்மா இருக்கக்கூடாது. பாருங்கள் நாங்கள் என்ன செய்துவருகிறோம்" என்று கூறுகிறார்கள்.

பர்மாவில் சீனப்படைகள் பாமோ என்ற நகரை மீட்டுவிட்டனர். மாண்டலே நோக்கி விரைந்து வருகின்றனர். ஜப்பானியரின் ஆதிக்கத்துக்கு முடிவுகட்ட சீன வீரர்கள் அரும்பாடுபடுகின்றனர்.

பிரிட்டிஷ் படைகள் இண்டா, பூதிடாங் முதலியவிடங்களைப் பிடித்துவிட்டனர்.

இப்படி பர்மாவிலிருந்து ஜப்பானியர் விரட்டப்படுவதற்கான காரியங்கள் கைகூடிவரும் சமயத்தில் பிரிட்டிஷ் முதலாளிகள் ஏகாதிபத்திய ஆதிக்கத்தை நீடிக்கத் திட்டங்கள் தயாரித்து வருகின்றனர். ஏமரி பிரிட்டிஷ் மந்திரிசபையில் பர்மாவுக்கும் மந்திரியாகத் திகழ்கின்றார். சமீபத்தில் நடந்த விவாதத்தில் அந்நாட்டு மக்களுக்கு சுதந்திரம் என்ற பேச்சைக்கூடக் கிளப்பவில்லை ஏமரி.

சீனவுக்குள்ளே சுங்கிங் நோக்கி ஜப்பானியர் முன்னேறிவிடுவார்களே என்று பயப்படும் பேரபாயகரமான நிலைமை மாறிவிட்டது. தென்மேற்கிலிருந்து ஜப்பானியர் ஆரம்பித்த தாக்குதல் உடைபட்டுவிட்டது. குவைச்சோ மாகாணத்திலிருந்து அவர்கள் விரட்டப்பட்டுவிட்டனர். அவர்களைத் துரத்திக்கொண்டு கிவாங்ஸி மாகாணத்துக்குள் சீனப்படைகள் நுழைந்துவிட்டன.

தூரக் கிழக்கில் ஆர்மாக் என்ற ஜப்பானிய தளம் பிலிப்பைன் தீவுகளில் இருக்கின்றது அது அமெரிக்கப்படைகளால்கைப்பற்றப்பட்டது. ஜப்பானியர் லெய்ட் தீவில் 82,000 பேர்களை இழந்துவிட்டனர். பிரிட்டனும் பஸிபிக் பிரதேசத்துக்கு ஒரு தனிக் கப்பற்படையை அமைத்து, அதற்கு அட்மிரல் ப்ரூஸ் ப்ரேஸர் என்பவரைத் தளபதியாக நியமித்திருக்கின்றது.

---

—கிரீஸில்—

# சமரஸப் பேச்சு

## சர்ச்சில் பணிகிறார்

"பகலெல்லாம் இடைவிடாமல் சண்டை; இரவெல்லாம் இடைவிடாமல் சமரஸப்பேச்சு" இதுதான் சென்ற ஞாயிறன்று கிரீஸிலிருந்து வந்த கடைசித் தந்தி.

பத்து நாட்களுக்கு மேலாக பாஸிஸத்தை எதிர்த்து வீரத்தியாகங்களைச் செய்து நாட்டை விடுவித்தவர்களுக்கும், பாஸிஸ எதிர்ப்புப் போரில் குண்டுமாரியும் துப்பாக்கிப் பிரயோகமும் செய்யவேண்டிய பிரிட்டிஷ் படைகளுக்கும் சண்டை. இதை பிரிட்டிஷ் மக்கள் விரும்புகின்றனரா? ஆதரிக்கின்றனரா; அல்லது வேறு நாடுகளிலுள்ள சுதந்திரப்பிரியர்கள் ஆதரிக்கின்றனரா? இல்லை, இல்லை. பிரிட்டிஷ் பத்திரிகைகள் பிரிட்டிஷ்படைகள் உபயோகப்பட்டிருப்பதைக் கண்டித்திருக்கின்றன. அமெரிக்கப் பத்திரிகைகள் கண்டித்திருக்கின்றன. பிரிட்டனில் சென்றவாரம் நடந்த தொழிற்கட்சி மகாநாட்டில் "சர்க்காரின் செய்கை வருந்தத் தக்கது" என்று கூறும் தீர்மானம் நிறைவேறியது. தீர்மானம் கட்சி நிர்வாகத்தின் சார்பில் சமர்ப்பிக்கப்பட்டது. விவாதத்தில் இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவு தந்தாலும் சர்க்கார் போக்கை இன்னும் வன்மையாகக் கண்டிக்கும் மனப்பான்மை நன்ருகப் புலப்பட்டது.

இத்தனை கண்டனங்களுக்கிடையில் சர்ச்சில் "நான் கலகத்தை அடக்கிவிட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பேன்" என்ற மனப்பான்மையுடன் உதவிப்படைகளையும், துப்பாக்கிகளையும், குண்டுகளையும் அனுப்பித்துக்கொண்டிருக்க முடியுமா?

பிரிட்டிஷ் 'ஒற்றர்கள்' ஸர்விஸ் (Intelligence service) ஈ. ஏ. எம் இயக்கத்துடன் தொடர்பு வைத்துக்கொண்டு அதை ஆதரித்தனர். ஆனல் பிரிட்டிஷ் அயல்நாட்டிலாகா வலதுசாரியையும் கிரேக்கமன்னனையும் ஆதரித்து வந்தது. இவ்விரண்டு போக்குக்குமிடையே ஏற்பட்டுள்ள முரண்பாடே இன்றைய கிரேக்க நிலைமைக்குக் காரணம் என்று ஒரு அமெரிக்கப்பத்திரிகை எழுதுகின்றது.

### உலக மக்கள் கண்டனம்

பிரிட்டிஷ் சர்க்காரின் ராணுவ பலத்தைக் கொண்டேதான் பாப்பாண்ட்ரூ சர்க்கார் வாழ்ந்து வருகின்றது என்பது தெளிவாகி விட்டது. எந்தப் பகுதியும், மிதவாதப் பகுதி கூட பாப்பாண்ட்ரூவை ஆதரிக்கவில்லை. அதனல்தான் சர்ச்சில் போக்குக்கு உலகெங்கும் கண்டனம் கிளம்பியுள்ளது. காமன்ஸ் சபையில் சர்ச்சில்பெற்ற ஆதரவு பெயரளவுக்கு அவருக்குத்தரப்பட்ட ஆதரவுதான்; உண்மையில் விடுவிக்கப்பட்ட பிரதேசங்களில் பிரிட்டிஷ் இராணுவ பலத்தைக்கொண்டு, ஒரு பிற்போக்கான சர்க்காரை, மக்களின் மீது சுமத்த முடியாது, என்பதையே உலக அபிப்பிராயம் வற்புறுத்தி இருக்கின்றது. அதற்கும் சர்ச்சில் பணியவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. அதனல்தான் இன்றைக்கு சமரஸப் பேச்சுவார்த்தைகள், நடைபெறுகின்றது.

### சர்ச்சில் பணிந்து வருகிறார்

மெடிடேரேனியன் பிரதேசத்துப் பிரதம தளபதி, பீல்ட் மார்ஷல் அலெக்ஸாண்டரை ஏதென்ஸுக்குப் போய்வரச் சொன்னர். பிரிட்டிஷ் ரெஸிடெண்டு மந்திரி, ஹாரால்டு மாக்மில்லனைப் போய் அங்கேயே கொஞ்சநாட்கள் இருக்கச் சொன்னர். ஜெனரல் ஸ்கோபியை சமரஸ தூதுகோஷ்டிகளைப்பார்த்து, சீக்கிரத்தில் சமரஸம் ஏற்படுத்திக் கொள்ளச் சொல்லி இருக்கவேண்டும். அதனல்தான் பகலெல்லாம் சண்டை, இரவெல்லாம் சமரஸப் பேச்சுவார்த்தை நடந்துவருகின்றது.

கிரேக்க மக்கள் கோருவது என்ன?

ஜெனரல் ஸ்கோபி அட்டிகாவை விட்டு ஈலாஸ் படைகள் வெளியேற வேண்டும் என்கிறார். அதற்கு சம்மதம்தான் என்கின்றனர். ஆனல் அத்துடன் ஸ்கோபி "ஆயுதங்களைக் கீழே வைத்துவிடு" என்கிறார். அதற்கு அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. தேசிய சர்க்கார் அமைத்து, அதன் உத்திரவுப்படி எல்லாகட்சிகளும் ஆயுதங்களைக் கீழேவைத்துவிடலாம் என்கின்றனர்.

இதனிடையில் ஒரு 'ரீஜென்ஸி' ஏற்படுத்தலாம் என்ற யோசனை கூறப்படுகின்றது. ரீஜண்ட் பதவியைவகிக்க கிரேக்க ஆர்ச்பிஷப் டாமாஸ்கினுஸ் சம்மதித்துவிட்டாராம்!

கிரேக்கமக்கள் ஜனநாயக அமைப்பு, தேசீய சர்க்கார் வேண்டும்; வலதுசாரிகளின் எதிர் புரட்சியைத் தவிர்க்கவேண்டுமென்று கவலைப்படுகின்றனர். மீண்டும் மன்னராட்சியை ஏற்படுத்தி பழைய எதேச்சாதிகாரம் ஏற்பட்டுவிடக்கூடாது என்று விரும்புகின்றனர். அதற்குப் பதில் ரீஜென்ஸி என்று பிரிட்டிஷ் ஜெனரல் கூறுகிறார்.

---

(முதற் பக்கத் தொடர்ச்சி)

தீர்மானம். இதைப் பிரரேபித்த ஸ்ரீ முத்துரங்க முதலியாரின் பிரசங்கத்தையும் இதை ஆதரித்து பேசியவர்களின் பிரசங்கங்களையும் கேட்டிருந்தால், நன்கு தெரியும். நிர்மாணத் திட்டத்தைப்பற்றியா அவர்கள் பேசினர்கள்? அல்ல! கம்யூனிஸ்டுகளை ஒழிக்கவேண்டும்! என்பதுதான் நிர்மாணத்திட்டம் என்று அவர்கள் நினைப்பதாகத்தான் அந்தப் பிரசங்கங்களிலிருந்து தெரியவரும்.

### ஹிட்லர் வாதம்

பாவம். மதுரை ஸ்ரீ வெங்கடாசலபதி உள்ளத்திலுள்ளதை அப்படியே பொட்டென்று சொல்லிவிடும் வெகுளி. இந்தக் கம்யூனிஸ்டு எதிர்ப்பு இயக்கத்திற்குப் பணம் வேண்டுமே என்ற கவலை அவருக்கு. பணக்காரர்களைப் பண உதவியளிக்கக் கோருகிறார். அவர்களை பயமுறுத்துகிறார். "கம்யூனிஸம் வந்துவிட்டால் உங்கள் சொத்தெல்லாம் பறிமுதல் ஆகிவிடும். ஆகவே, உங்கள் சொத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக இப்பொழுது கொஞ்சம் பணம் கொடுங்கள்" என்று பணமூட்டைகளைப் பார்த்து அவர் பயமுறுத்துகிறார்! பணக்காரர்களின் சொத்தைக் காப்பாற்ற ஸ்ரீ வெங்கடாசலம் போன்ற ஊழியர்களுக்கு இவ்வளவு கவலை ஏன் ஏற்படவேண்டுமோ தெரியவில்லை! இந்த மனப்பான்மையைக் கொண்டு தொழிலாளர், விவசாயிகளிடம் வேலைசெய்ய வேண்டுமாம்!

### வழாவழாத் தீர்மானம்

காங்கிரஸ்—லீக் ஒற்றுமைப் பிரச்சினையை காந்திஜிக்கு விட்டுவிடுவோம் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

காந்தி—ஜின்ன சம்பாஷணைகள் முறிந்த பிறகு, கடிதப் போக்குவரத்தைப் பிரசுரித்தபோது, காந்திஜி, தேச மக்கள் இதை விவாதித்து, சரியான யோசனை கூறவேண்டுமென்று கூறினரல்லவா? ஆனல், அந்தப் பிரச்சினையைப் பற்றி ஆலோசனைகூட செய்ய மறுப்பதுதான் தேச மக்களின் அபிப்பிராயத்தை உருவாக்கக்கூடிய காங்கிரஸ்காரர்கள் மகாநாடு காட்டும் வழி!

ஆனல் அந்தத் தீர்மானத்தைப் பிரரேபித்துப் பேசுகையில், லீகை திட்டுவதுதான், மீண்டும் இரு தலைவர்களும் கூடும்படியான சூழ் நிலையை ஏற்படுத்த வேண்டுமென்று காந்திஜி விடுத்த வேண்டுகோளுக்கு கொடுக்கும் மதிப்பு!

இந்த வெறுப்பு மனோபாவத்தின் காரணமாகத்தான், தேசத்தின் முன்னுள்ள உடனடிப் பிரச்னைகள் ஒன்றிலாவது கவனம் செலுத்தாமலிருந்தது இந்த மகாநாடு. "நாட்டில் எங்கும், அச்சம், கயமை, சூது, சுயநலம் இவை சூழ்ந்திருக்க காந்திஜி காண்கிறார். இதை நீக்க தன் சக்தியனைத்தையும் அவர் அர்ப்பணித்துப் பாடுபடுகிறார்" என்று ஸ்ரீ. பாடீல் கூறினர்.

ஆனல், இதை காங்கிரஸ் வாதிகள் காணவேண்டுமே. கண்டிருந்தால், கள்ள மார்க்கட்டை நடத்தும் கயவர்களின் சூதாட்டத்தை ஒழிக்க என்ன வழி என்பதைத் தீர்க்கமாக ஆலோசனை செய்திருக்க மாட்டார்களா? இதைப்பற்றி ஒரு வார்த்தை கூட மகாநாட்டின் நடவடிக்கைகளில் காணமுடியாது. ஜனங்களின்சேவையை அடிப்படையாகக் கொண்டால்தான் எந்த நிர்மாணத் திட்டமும் உருப்படியாக இருக்க முடியும். இன்றுள்ள நிலைமையில், உணவுப் பஞ்சத்தைநீக்க திட்டமாக காங்கிரஸ் ஊழியர்கள் பொதுஜனங்களைத் திரட்டி சமூகப் பகிஷ்காரம் முதற்கொண்டு எல்லாவகை ஆயுதத்தையும் உபயோகித்து, சேமிப்பாளர்களையும் கள்ள மார்க்கெட்டுச்சூதாட்டக்காரர்களையும் ஒழிக்க முன்வந்தால்தான் நம்மக்களை பட்டினியால் அழிவதிலிருந்து பாதுகாக்கமுடியும். காந்திஜீயும், தேச பக்தர்களுக்கு இந்த வேண்டுகோளை விடுத்திருக்கிறார்.

### கோயம்புத்தூரை பின்பற்றுங்கள்

இந்த நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றவேண்டுமானல், எல்லா சக்திகளையும் திரட்ட முற்படவேண்டும். ஸ்தாபனச் சட்டதிட்டங்களல்ல இன்றைக்குள்ள பிரச்சினை. மக்களைக்காப்பாற்றுவது என்பதே பிரச்சினை

நிர்மாணத்திட்டம் என்ற வெறும் கோஷத்தைக்கிளப்பி, ஆனல் கம்யூனிஸ்டு வெறுப்பு ஒன்றையே அடிப்படையாகக்கொண்டு, ஸ்தாபனத்தைப் பலப்படுத்திவிடலாம் என்ற நினைப்பு ஆபத்தானது. இதனல் ஸ்தாபனம் பலம்பெருது; சீர்குலைவுதான் ஏற்படும்.

இந்த வெறுப்பு மனோபாவத்தை விட்டொழித்து, ஜனசேவையில் ஈடுபட, சகலரும் சேர்ந்து திட்டமிட அந்தந்த ஜில்லாவிலுள்ள காங்கிரஸ் வாதிகள் முன் வருவார்களாக! கோயம்புத்தூர் ஜில்லா இதற்குச் சான்றதோர் உதாரணமாகும்.

---

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

பொன்னன சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டு நம் மனோரதம் கைகூடச் செய்தவர்களாவோம். இதுவே ஸ்டாலின் 66-வது பிறந்ததினத்தில் நாம் ஞாபகபடுத்திக்கொள்ள வேண்டியதாகும்.

Edited, Printed and Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press 1/6, Davidson Street, G. T. Madras. Regd. No. M. 4514